


வெளுக்கும் துணிகளெல்லாம் வெண்மை மயம், துப்புரவான தூய்மை மயம்: வெல்வது ஸர்ப் சலவையின் எல்லைமீறிய வல்லமை! கரைகடந்த நுரைவளம்! கேட்பானேன். சேலை, சிற்றுடை முதல் சிறுவரின் ஆடைவரை ... எதற்கும் நிகரிலாத வெண்மை, சிகரமான தூய்மை! கைப்பட. வீட்டிலே துணி வெளுக்க ஒரே வழி; கைகண்ட ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

SU. 38-140 TM

கல்கி

## நினைவுத்திரையில்....

ஒருவன் தான் உயிர் வாழும் காலத்தில் ஒரு சிலருக்கு உதவி புரிந்து அவர்களுடைய வாழ்க்கையில் ஆனந்தம் உண்டாக்குவானானால் அவனைப் பரோபகாரி என்று போற்றுகிறோம். ஆயிரக்கணக்கான வருஷங்களில் கோடிக்கணக்கான மக்களுடைய வாழ்க்கையை ஆனந்த மயமாக்கும் தொண்டு புரிந்து விட்ட ஒருவரை நாம் என்னென்று போற்றுவது? போற்றுவதற்கு மனித பாஷையில் சொற்கள் ஏது? இன்னொரு தெய்வக்கவி தோன்றிக் கவிதா பாஷையில் தான் சொல்லவேண்டும்.

டாகூர் மகாகவி மட்டுமல்ல; அவர் மகாஞானி. அவருடைய கவிதைகள் அனந்த காலத்துக்கு உலகத்தின் அஞ்ஞான இருளைப் போக்கி, ஞான ஒளி வீசி, மாந்தருக்கு சத்திய மார்க்கத்தைக் காட்டப் போகின்றன.

கல்கி - 1941, ஆகஸ்டு 10

## பொருளடக்கம்

ப்ரபவ சித்திரை 11 ● ஏப்ரல் 24



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


தீப்தி

இல்லந்தோறும்
பிரபலமாகிவிட்ட
பெயர்

[illegible]

தி ஓரியண்டல் மெட்டல்
இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.,
67, 77, [illegible] தெரு,
கல்கத்தா - 12.

தீப்தி லாந்தர்கள்

காஸ் ஜனதா

எனாமல் சாமான்கள்

Kalpana - om


மக்கள்
பாதுகாப்புச் சட்டம்


இந்தியாவைப் பாதுகாப்பது
தான் நோக்கம்


மீண்டும் இந்த மனிதரா?
தேர்தல்
நிதி
PK

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 25 ● இதழ் 39



# இந்த சோஷலிஸம்தான் என்ன?

ராஜாஜி

“பிறப்பையோ செல்வத்தையோ அறிவையோ அடிப்படையாகக் கொள்ளாமல், நன்னடத்தையையே அடிப்படையாகக் கொண்ட ஓர் உயர்ந்த வர்க்கத்தை நாம் மீண்டும் உருவாக்க வேண்டும். இதற்குமேல் நான் சொல்வதற்கில்லை. ஏனெனில், இந்நிலையை மனத்தினால் எண்ணிப் பார்க்க முடியுமே யொழிய நாவினால் மொழிய முடியாது” என்று மூன்றாண்டுகளுக்கு முன்பு நான் ஒரு கட்டுரையை முடித்திருந்தேன். ‘ஸதாசாரம்’ பற்றி நிறையப் பேசப்படும் தற்போது அதை நினைவு கொள்கிறேன். நன்னடத்தை கொண்ட ஓர் உயர் வர்க்கத்தைப் புனர் நிர்மாணித்தோமாயின் நாம் உண்மையிலேயே பெருமை பெறுவோம். நாம் கனவு காணும் ஆலைகளும் உலைகளும் நமக்கு அத்தகைய பெருமையைத் தர முடியாது.

கெட்ட ஒழுக்கத்தின் மறைந்துள்ள வேர்களில் பெர்மிட் - லைசென்ஸ் - கோட்டா முறை அனவரதமும் எருவை இட்டுக் கொண்டிருப்பதால் துராசாரம் எங்கும் வியாபித்து விடுகிறது. இந்நிலையில் நல்லொழுக்கமாகிற ஸதாசாரத்தை ஏற்படுத்துவது சாத்தியமா? நடைமுறையைக் காணாமல் கண்ணை மூடிக் கொண்டு வெளித் தோற்றத்தையும், சம்பிரதாயத்தையும், வேஷத்தையுமே கண்டு திருப்திப்பட்டாலொழிய சதாசாரம் ஏற்படுத்துவது எளிதல்ல என்றே உணர்வோம்.

நோயாளி பத்தியமிராமல் வியாதிக்குக் காரணமான உணவையே உண்டு வருவானாகில் மருந்து எவ்வளவு வீரியமுள்ளதாக இருப்பினும் நோயைக் குணப்படுத்த முடியாது. தவறான முறையில் சுயநல ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளும் மனிதனை நல்வழிப்படுத்துவது மிகவும் சிரமம். அதோடு ஆட்சி முறையும் பெர்மிட்—லைசென்ஸ் ஆகியவற்றால் மனிதனின் சுயநல ஆசைக்கு அனுகூலமாக அமைந்துவிடும்போது அவனைத் திருத்துவது மேலும் கடினமாகி விடுகிறது. மலை உச்சிக்கு உருட்டிக் கொண்டு போன பாறை கீழே சறுக்கி விழுவதும், மீண்டும் அதை உச்சிக்கு உருட்டிச் செல்வதும் போல், செய்த காரியம் வியர்த்தமாகித் திரும்பத் திரும்ப முயன்று கொண்டே இருக்க நேர்கிறது. எனவே, ஸதாசாரத்தைப் பற்றி நாம் உண்மையிலேயே தீவிர அக்கறை கொண்டிருப்போமாயின், துராசாரத்தின் வேரில் இடப்படும் எருவை அப்புறப்படுத்த நம்மால் இயன்றதனைத்தையும் செய்ய வேண்டும். ஆளும் கட்சி தனது பெர்மிட் — லைசென்ஸ் கொள்கையை விட்டுச் சுதந்திரப் பொருளாதாரத்தை ஏற்குமாறு செய்ய வேண்டும்; இல்லாவிடில் அக்கட்சியையே ஆட்சியிலிருந்து அகற்ற வேண்டும். பெர்மிட் — லைசென்ஸ் கொள்கையைத் தனது தருமபத்தினியாகக் கருதி அதனுடனேயே வாழ்கிறது காங்கிரஸ். இதற்குக் காரணம் இந்தக் கொள்கையால் உற்பத்தி அதிகரிப்பதோ விநியோகம் சீர்ப்படுவதோ அல்ல; கட்சிக்குப் பணம் திரட்டவும் கட்சிக்காரர்களுக்குப் பெரும் அதிகாரம் தரவும் இது ஒரு சக்திவாய்ந்த கருவியாக உள்ளது என்ற காரணத்துக்காகவே இக்கொள்கையைக் காங்கிரஸ் பின்பற்றுகிறது. இந்தச் சூழ்நிலையில்தான், நன்னடத்தையுள்ள உயர் வர்க்கம் உருவாக வேண்டும் என்று நாம் எதிர்பார்க்கிறோம்.

மூன்றாண்டுகளுக்கு முன் எழுதியதை மீண்டும் நினைவுகூர்கிறேன் :

> சேவைக்கே தங்களை அர்ப்பணம் செய்து கொள்ளக் கூடிய இளைஞர்களை நாம் எல்லா இலாகாக்களிலும் பெற முடியுமென்றும் அவர்கள் மூலம் நிர்வாகத்துறையின் நடத்தையைப் புரட்சிகரமாகத் திருத்த முடியும் என்றும் நம்புவோமாக.

இவ்வாறு நாம் நம்பிக்கை வைக்க வேண்டுமாயின் அதற்குச் சில காரியங்கள் செய்தாக வேண்டும்.

முதலாவதாக, லஞ்சத்தை ஒழிக்கும் புனிதப் போர் புரிவதற்கே தம்மை அர்ப்பணித்துக் கொள்ளுமாறு அறிவுள்ள இளைஞர்களை ஊக்க வேண்டும்.

சுதந்திரத்துக்கு முற்பட்ட காந்தியக் காலத்தில் எளிய வாழ்வு பெற்றிருந்த உயர்ந்த இடத்தை மீண்டும் நிலைநாட்ட வேண்டும். எளிய வாழ்வு என்ற இலட்சியம் போய், வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் அதிக ஈடுபாடு காட்டுவதால்தான் நமது ஆன்மாக்களில் மாசு படிந்து விட்டது.

உற்பத்திக்கு நேரடியாக உதவிபுரியாத சர்க்கார் காரியாலயங்களில் ஊழியர்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்த வேண்டும். சர்க்கார் காரியாலயங்கள் அவசியமானவையே; ஆனால் அவற்றில் அவசியமான அளவுக்குத்தான் ஊழியர்கள் இருக்க வேண்டும். அவர்கள் குறைந்த எண்ணிக்கையில் நிறைந்த வருவாய் பெறுபவர்களாக இருக்க வேண்டும்.

உற்பத்திக்கு உதவும் தொழிற்சாலைகளின் வளர்ச்சியைச் சர்க்கார் கட்டுப்பாடுகளால் தடுக்கக் கூடாது. அவை வளர வளர மேன்மேலும் இளைஞர்களுக்கு அவற்றில் தொழில் கிடைக்குமாதலால், அவர்கள் சர்க்கார் உத்தியோகத்தைத் தேடவேண்டியிராது

வரிகளைக் குறைக்க வேண்டும்; பணவீக்கத்தைக் குறைக்க வேண்டும்; மத்தியத் திட்டத்தின் பிடியிலிருந்து தனியாரின் முதலீட்டையும் ஊக்கத்தையும் விடுவிக்க வேண்டும். லஞ்ச ஊழலின் விஷப் புகையை அகற்ற இது பெரிதும் உதவும்.

'படாடோபமின்றி வாழ்வோம் ; எந்த வேலையில் இருப்பினும், எச்சூழ்நிலையிலும் நேர்மையாகவே இருப்போம்' என்று இளைஞர்களும் யுவதிகளும் பிரதிக்ஞை செய்து கொண்டால் நமது எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கை கொள்ளலாம். இத்தகைய ஆன்ம சமர்ப்பணமிருந்தாலொழியக் கல்வி கற்றதன் பயனைப் பெற்றதாகாது. நேர்மையொன்றே நம்மைக் காக்கும். ஆண்டவனிடம் நம்பிக்கையை வளர்த்தாலே அவனருளால் நேர்மை ஏற்படும். ஆண்டவனிடம் நம்பிக்கை வைக்கவும் அவனது அருள் வேண்டும். அதனை அவன் அளித்து, இந்நாடு தனது பெருமைக்குத் தகாத துர்க்கதியை அடைந்து விடாதவாறு காக்க வேண்டும்.

நன்னடத்தை பற்றி இவ்வளவு சொன்னேன். லௌகிகமான, பௌதிகமான விஷயங்களைப் பார்ப்போம். மூன்று திட்டங்களிலுமாக 14,000 கோடி ரூபாய் செலவிட்ட பின் மக்களின் ஆதாரத் தேவைகளையாவது பூர்த்தி செய்திருக்கிறோமா? இவற்றுள் உணவு விஷயம் பற்றி நான் ஏதும் வினவ வேண்டியதில்லை. ஒருவன் தனது நிலத்தில் அதிக விளைச்சல் காண்பதற்கு உள்ள தடைகளை விலக்குவதே உணவுப் பிரச்னையின் தீர்வு.

இப்பிரச்னையை விட்டுச் சர்க்காரின் முழுப் பொறுப்பாகிய குடிநீர்ப் பிரச்னையைப் பார்க்கலாம். கிராம மக்களுக்கெல்லாம் சுத்தமான குடிநீர் கிடைக்கச் செய்திருக்கிறோமா? கிராமங்களிலெல்லாம் சுகாதாரக் கழிவுகால்கள் அமைத்து வியாதியைக் குறைத்திருக்கிறோமா? மற்ற சுகாதார வசதிகளை ஏற்படுத்தித் தந்திருக்கிறோமா? வாழ்க்கைக்கு அடிப்படையான இது போன்ற தேவைகளை நாட்டின் எண்பது சதவிகிதத்தினரான கிராம மக்களுக்கு அளிக்காதபோது ஆள்கிற கட்சி முழங்கும் சோஷலிஸம் என்பதுதான் என்ன? இந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்ய அரசாங்கத்துக்குப் பணமா இல்லை? நான்காம் திட்டம் உட்படச் சர்க்காரின் செலவு சுமார் முப்பதாயிரம் கோடி ரூபாய். இதைக் கொண்டு சோஷலிஸத்தினால் முதலாவதாக நன்மை பெற வேண்டிய நிராதரவான ஏழை மக்களுக்கு வசதி செய்து தர முடியாதா? 1954லிருந்து பன்னிரண்டு ஆண்டுகளாக நாட்டின் நிர்வாகத்தில் பூரண ஆதிக்கம் செலுத்தியவர்கள் தங்களுக்குப் போதிய அவகாசம் இல்லை என்றுகூற முடியுமா? மக்களின் அடிப்படைத் தேவைகளைக் கவனிக்காததற்கு, எஃகு இரும்புத் தொழிற்சாலையும், மோட்டார் கார் தொழிற்சாலையும் நிறுவியிருப்பதை சாக்காகக் காட்ட முடியுமா ?

ஒருபுறத்தில் ஏழை மக்களின் லௌகிகத் தேவைகளைப் பூர்த்தி செய்யாமல், மறுபுறத்தில் நாட்டில் கெட்ட ஒழுக்கமாகிய துராசாரத்தையும் பரப்பியுள்ள ஐந்தாண்டு திட்டங்களும், சோஷலிஸமும் எதற்காக? 'இது மத்திய சர்க்கார் பொறுப்பு; இது ராஜ்ய சர்க்கார் பொறுப்பு; இதை இன்னார் செய்யத் தவறி விட்டார்கள்' என்று சாக்குக் காட்டிப் பயனில்லை. இப்போது மத்திய சர்க்காரிடம்தான் சகல அதிகாரங்களும் குவிந்துள்ளன; சோஷலிஸத்தைப் பின்பற்றத் தொடங்கிப் பன்னிரண்டு ஆண்டுகளாகி விட்டன; திட்டங்கள் வகுக்கத் தொடங்கிப் பதினைந்தாண்டுகள் ஆகிவிட்டன; ஒரே அரசியல் கட்சிதான் அன்றிலிருந்து இன்றுவரை டில்லியிலும் ராஜ்யங்களிலும் ஆட்சியில் உள்ளது. இவ்வளவும் இருந்தும் ஒரு கட்சி தனது தவற்றுக்காகவும் தோல்விக்காகவும் கண்டனமோ தண்டனையோ பெறவில்லை எனில், அது இந்தியா ஒன்றில்தான் நடக்கும். 'சோஷலிஸம்' என்பது போன்ற சித்தாந்தச் சொற்றொடரை உபயோகித்துக் குழப்பாமல், ஏழை மக்களின் நலனையே அரசாங்கம் தன் இலட்சியமாகக் கொள்ள வேண்டும் என்று திட்டவட்டமாகக் கூறப்பட்டிருந்தால் நம் சர்க்கார் இருபதாண்டுகளில் நழுவ விட்ட வாய்ப்புக்களைக் கண்டித்தும், சீர்திருத்தியும் நல்வாழ்வு கண்டிருப்போம்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

★ அதிருப்தியாளர் கோஷ்டி
★ பிரித்தாளும் கொள்கை
★ தேசத்தை மீட்க வழி
★ பிரதமரின் வாசகம்
★ நிவாரணம் கிடைக்கும்
★ சோஷலிஸ மோகம்
★ அதரும காரியம்
★ வியட்நாம் விவகாரம்

காங்கிரஸுக்குள்ளேயே பிளவு ஏற்பட்டு அதிருப்தியாளர் கோஷ்டிகள் ஏற்படுவது பற்றி நிறையச் செய்திகள் வெளியாகின்றன. ஆனால் இது காங்கிரஸுக்கு உண்மையான எதிர்ப்பைக் காட்டுவதாகாது. காங்கிரஸிலிருந்து பிரிந்து போகிறவர்களின் இலட்சியம் என்ன? கொள்கை மாறுபாடு கொண்டு தேசத்துக்கு வேறு விதத்தில் தொண்டு செய்து தலைமை தாங்குபவர்களா அவர்கள்? அல்ல. முதலில் இவர்கள் சிறிது கூச்சலும் மிரட்டலும் போட்டாலும், பிறகு சுயநல முன்னேற்றத்துக்காக இன்றைய அதிகார பீடத்தின் முன் வளைந்து கொடுத்து விடுகிறார்கள்; தங்கள் முன் எறியப்படும் ரொட்டித் துண்டுகளைத் திருப்தியுடன் எடுத்துக் கொள்கிறார்கள். கொள்கை அடிப்படையில் உண்மையான எதிர்ப்புச் சக்தி இவர்களிடையே இல்லை. போட்டி, பொறாமை, பதவி ஆசை இவை காரணமாக எழும் பிரிவில் ஆன்மிக சக்தி எதுவுமில்லை. காங்கிரஸ் கொள்கைகளில் காணும் தவறுகளை எந்தப் 'புரட்சி காங்கிரஸ்கார'ரும் உள்ளபடி கூறத் திறம் பெற்றிருக்கவில்லை; காங்கிரஸுடன் ஏற்கனவே போரிட்டு வரும் எந்த எதிர்க்கட்சியிலாவது சேரவும் இவர்களுக்குத் தைரியமும் கிடையாது.

✿ ✿ ✿

தேர்தலுக்காகக் காங்கிரஸ் செய்கிற பிரம்மாண்டமான முஸ்தீபுகளைப் பார்க்கும்போது, அதன் கொள்கைகளிலும் காரியங்களிலும் மக்கள் கொண்டுள்ள பெரும் அதிருப்தியைக் கட்சி எஜமானர்கள் முற்றிலும் உணர்ந்திருப்பது தெரிகிறது. இச்சமயத்தில் எல்லா எதிர்க் கட்சிகளும் ஒன்று கூடிப் பணி புரிய வேண்டிய மகத்தான வாய்ப்பை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். காங்கிரஸின் பிரித்தாளும் கொள்கையால் எதிர்க் கட்சிகள் மயங்கி விடக் கூடாது. பிரித்தாளும் கொள்கையைக் காங்கிரஸார் பிரிட்டிஷ் ஆட்சியிடமிருந்து ஸ்வீகாரம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

✿ ✿ ✿

ஆறுவிய நோக்கமும் கொள்கைப் பிடிப்புமின்றி எதிர்க் கட்சிகள் ஒன்று சேர்ந்து காங்கிரஸுக்குப் பதிலாக விவேகமுள்ள நல்ல நிர்வாகத்தைத் தருவதற்குத் தடையேதுமில்லை. அப்படி ஏதேனும் தடையிருக்குமாயின் அது சில கோஷ்டிகள் தமது தனித் தன்மையைப் பிரகாசப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதில் கொண்டுள்ள பயனற்ற அவாதான். ஒரு கோஷ்டியின் தனித்தன்மையைக் காட்டுவதற்காகச் சட்டசபையின் எதிர்க்கட்சி பெஞ்சுகளில் ஒரு சிலர் சக்தியற்று அமர்ந்திருப்பதில் பொருள் என்ன? காங்கிரஸாட்சியிலிருந்து தேசத்தை மீட்க வேண்டுமாயின் எதிர்க் கட்சிகள் தங்களது தற்காதலைத் துறக்க வேண்டும்.

✿ ✿ ✿

ராஜ்யங்களில் சத்ரபதிகளாக விளங்கும் முதன்மந்திரிகள் பாதுகாப்புச் சட்டம் ரத்தாவதை விரும்பவில்லை. நெருக்கடி நிலைமையை நீக்குவதில் அவசரமே கூடாது என்று அவர்கள் மத்தியசர்க்காரிடம் கூறியிருப்பதாகத் தெரிகிறது. மத்திய சர்க்காரையும் பாதுகாப்பு மந்திரி இலாகாவையும்விட ராஜ்ய சர்க்கார்களுக்கு இவ்விஷயத்தில் அதிக அக்கறை யிருப்பது போல் பேசியிருப்பது விந்தை. ஜனநாயக மரபுகளை அழித்துவிட்டாலொழியத் தங்களுக்கு ஆளச் சக்தியில்லை என்பதைத் தங்களது தயக்கத்தின் மூலம் அவர்கள் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். ஜனநாயகத்தின் கீழ் தங்கள் பணிகளில் முன்னேற முடியாது; பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்தான் முடியும் என அவர்கள் நினைக்கிறார்கள். 'நெருக்கடி காலக் கட்டுத் திட்டங்கள் நிர்வாகத்தின் சகஜமான அம்சமாகி விடுவதற்கு அனுமதிக்கக் கூடாது; காலம் தவறியும் நெருக்கடி நிலையை நீடித்தால் உண்மையான நெருக்கடி ஏற்படும் போது அதைச் சமாளிக்க உபாயம் இல்லாமற் போய் விடும்' என்று ஸ்ரீமதி இந்திராகாந்தி அவர்கள் கூறியிருப்பது விஷயத்தைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் தெரிவிக்கிறது. மிகவும் சரியாகக் கூறப்பட்டுள்ள இந்தக் கருத்தின்

முழுச் சக்தியையும் புரிந்து கொள்ளுமளவுக்கு முதன்மந்திரிகளுக்கு ஜனநாயக உணர்ச்சியில்லை. அவர்களது விஷமம் தொடரப்படுமாயின் பிரதமரின் சிறப்பான வாசகங்களினால் மட்டும் நாடு திருப்தியடைந்துவிட முடியாது.

❁ ❁ ❁

மக்களிடமிருந்து எவ்வளவு வரிகளை உறிஞ்சலாம் என்பதில் சர்க்கார் போடும் கணக்கு அப்படியே நிறைவேற்றப்படுகிறது. ஆனால் அந்த நிதியைக் கொண்டு செய்ய வேண்டிய காரியங்களைச் சரிவரப் பூர்த்தி செய்ய முடியவில்லை. 'நிதி இலக்குகளை அடைந்துவிட்டோம்; திட்ட இலக்குகளைத் தான் அடைய முடியவில்லை' என்று கூறுவதன் பொருள் இதுவே. எனினும், 'நிதி இலக்கு'களை ஒவ்வொரு திட்டத்திலும் பெருக்கிக் கொண்டே போகிறார்கள். சூதாடி ஒவ்வொரு முறையும் அதிகப் பணம் கட்டி, 'இம்முறை முன் இழந்ததையும் சேர்த்துப் பெற்று விடலாம்' என்று எண்ணுவது போன்றதே இது.

இந்த நிலவரத்தை எடுத்துக் காட்டியுள்ள ஸ்ரீ தண்டேகர் அவர்கள், 'சட்டத்துக்குத் திட்டங்கள் வளைந்து கொடுப்பதற்குப் பதிலாகச் சட்டங்கள் திட்டத்துக்கு வளைந்து கொடுக்கின்றன' என்று கூறியுள்ளார். ஜனநாயகத்தில் சட்டத்தின் ஆட்சி பெற வேண்டிய உன்னத ஸ்தானத்தை இன்று அது பெற்றிருக்கவில்லை. சட்டத்தின் வாசகங்களை மட்டும் பார்த்து மனம் போனபடி அவற்றின் கருத்தை மாற்றியதால் நீதியின் ஆட்சியே பலவீனமடைந்து விட்டது.

சாமானிய மக்களை ஏமாற்றுவது எளிது. ஆனால் அவர்களுக்கு விஷய ஞானம் அளித்து உண்மையைப் புரிந்து கொள்ளச் செய்வது கடினம். எனினும் காங்கிரஸை ஆட்சியிலிருந்து அகற்ற வேண்டுமாயின் இந்தக் கடினமான காரியத்தை அவசியம் மேற்கொண்டேயாக வேண்டும். ஏனெனில், இது சத்தியத்தைப் பரப்பும் பணி. பெர்மிட் — லைசென்ஸ்களுக்கு அடிமைப்படுத்தப்பட்ட வாக்காளர்களை ஆட்டி வைப்பவர்களின் அதிகாரம் ஓங்கி வருவதைக் கண்டு நாம் கலங்கிவிடக் கூடாது. 1962 மார்ச் மாதத்தில் நான் கூறியதை மீண்டும் நினைவுபடுத்துகிறேன்:

1947ல் ஆட்சியைப் பெறுவது காங்கிரஸுக்கு எளிதாக இருந்தது. பிற்பாடு பொருளாதார அதிகாரமும் அதனிடம் சேர்ந்த போது அக்கட்சியின் ஆட்சி நீடிப்பது மேலும் எளிதாகி விட்டது. ஏககட்சி ஆட்சி, அமிதமாகக் கட்டுப்படுத்தும் சர்க்கார் ஆகிய இரட்டைத் தீமைகளை உணர்வோரின் எதிர்ப்புப் பணி மிகவும் கடினமாகி விட்டது; இது காலக்கிரமத்தில் மேலும் கடினமாகும். எனினும் எந்தத் தீமையாயினும் ஒரு நாள் அது உச்சகட்டத்தை அடைந்து, இயற்கை விதிப்படி அதற்கான நிவாரணமும் தானே கிடைத்தாக வேண்டும்.

❁ ❁ ❁

சுதந்திரமாகத் தொழில் நடைபெறும் நாடுகளில்தான் பொதுமக்கள் முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள்; சர்க்காரின் தொழிற் கட்டுப்பாடு நிலவும் நாடுகளில் இத்தகைய முன்னேற்றத்தைக் காண முடியவில்லை என்பதற்குப் பேராசிரியர் ஃப்ரீட்மன் பல உதாரணங்கள் காட்டியிருக்கிறார். கிழக்கு ஜெர்மனியைவிட மேற்கு ஜெர்மனியும், இந்தியா— இந்தோனேஷியா இவற்றைவிட மலேஷியா-சிங்கப்பூர் இவையும், பர்மாவை விடத் தாய்லாந்தும், கம்யூனிஸ சீனத்தை விட ஃபார்மோஸா — ஜப்பான் இவையும் அதிக முன்னேற்றம் கண்டுள்ளதை அவர் ஒப்பிடுகிறார். 'சர்க்காரின் மத்திய திட்டத்தின் கீழ் பெரிய பெரிய பிரமிட்களையும், ஆலைகளையும் நிறுவுவது சாத்தியமாயிருக்கலாம். ஆனால் பொது மக்கள் அதிக நலன்கள் பெற்று அந்தச் சௌகரியங்கள் நீடித்து நிலவுவதைத் தொழில் சுதந்திரமில்லாத நாடுகளில் ஒன்றில்கூட நான் இதுவரை கண்டதில்லை' என்கிறார் ஃப்ரீட்மன். மலேயா சிங்கப்பூர் மக்களின் வாழ்க்கை நிலை இந்தியாவிலும் இந்தோனேஷியாவிலும் உள்ளோரது வாழ்நிலையைவிட நான்கு அல்லது ஐந்து மடங்கு உயர்ந்திருப்பதாகக் குறிப்பிடும் அவர், இதற்குக் காரணம் அந்நாடுகளில் தொழில் சுதந்திரம் நிலவுவதே என்கிறார். இப்போது மலேஷியா, இந்தியாவின் பாதையைப் பின்பற்றத் தொடங்கியிருப்பதற்கு அவர் வருத்தம் தெரிவிக்கிறார்.

சுதந்திரத் தொழில் நடைபெறும் நாடுகளில்தான் பொதுமக்களின் வாழ்க்கை நிலை

## ஆதி சங்கரருக்கு இலட்சார்ச்சனை

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதரவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது காஞ்சீபுர க்ஷேத்திரம். அத்தலத்தில் ஸ்ரீ காமாட்சி தேவியின் திருக்கோயிலில் ஆசாரியர்களின் அற்புதமான சந்நிதியொன்று அமைந்துள்ளது. சங்கர ஜயந்தியை முன்னிட்டு இங்குள்ள ஆசாரிய பிம்பத்துக்குச் சித்திரை 8-ந் தேதி (21—4—66) முதல் 21ந் தேதி (4—5—66) வரையில் இலட்சார்ச்சனை நடைபெறவிருக்கிறது. 334 ருத்ர திரிசதி அர்ச்சகர்களைக் கொண்டு இலட்சார்ச்சனை பூர்த்தி பெறுகிறது. இந்த அர்ச்சனையில் கலந்து கொள்வது நமக்கு ஞானமும் பக்தியும் வழங்கும் பரமாசாரியருக்கு நமது நன்றியைத் தெரிவிக்கும் ஓர் அடையாளமாகும். ஒரு திரிசதி அர்ச்சனைக்கான கட்டணம் ரூ. 6. தொகை அனுப்ப வேண்டிய முகவரி: காரியதரிசி, சங்கர பக்த ஜனசபா, 116—ஏ, ராஜவீதி, காஞ்சீபுரம்.

முன்னேற்றம் காண்கிறது என்றபோதிலும் இம் முறைக்கு மாறான சோஷலிஸத்துக்கு மிகுந்த ஆதரவு இருப்பதற்குக் காரணம் என்ன? ஏதேனும் ஒரு முறையில் ஒரு சிறு குறை தெரிந்தாலும் அதைச் சட்டத்தின் மூலம் நிவர்த்தி செய்து விடலாம் என்று எளிதில் எண்ணிவிட முடிகிறது. ஆனால், இப்படிச் செய்யப்படும் சட்டத்தின் விளைவாக ஏற்படக் கூடிய மறைமுகமான புதிய பல குறைகளை இவ்வளவு எளிதில் காண முடிவதில்லை. இதுவே சுதந்திரத் தொழில் முறையைச் சர்க்காரின் மூலம் கட்டுப்படுத்தும் சோஷலிஸக் கருத்துக்கு மிகுந்த ஆதரவு இருப்பதன் காரணம் என்கிறார் டிஸீ என்ற அறிஞர். சுதந்திரத் தொழில் முறையில் நேரடியாகத் தெரியக் கூடிய சிறிய குறைகளைவிடச் சர்க்கார் கட்டுப்பாட்டால் மறைமுகமாக விளையும் குறைபாடுகள் அதிக ஆபத்தானவை; எனினும் அவை மறைமுகமாக இருப்பதால் மக்களால் உணரப்படுவதில்லை. இதோடு சர்க்கார் தொழிலுக்காகச் செய்யப்படுவது போன்ற மகத்தான பிரசாரங்களைத் தனியார் ஒன்று சேர்ந்து செய்யாததும் சோஷலிஸ மோகத்துக்கு ஒரு காரணம் என்கிறார் ஃப்ரீட்மன்.

❁ ❁ ❁

என்னைப்போல் திரு காமராஜ் அவர்கள் மூன்றாண்டு சட்டக் கல்வி பயிலாதிருக்கலாம்; என்னைப் போல அவர் இருபதாண்டு வக்கீலாகத் தொழில் புரியாதிருக்கலாம்; எனினும் ஒரு கட்சிக்கு வேண்டிய தகவல்களைப் பெறுவதற்காக ஸி. ஐ. டி. போலீஸை உபயோகப்படுத்திக் கொள்வது சட்ட விரோதமானது என்பதை அவரும் என்னைப்போலவே நன்கு அறிவார். பொதுச் சேவையைச் சேர்ந்த எல்லா இலாகாக்களும் — ஸி. ஐ.டி., வானொலி இவை போன்ற யாவுமே—தேசிய ஸ்தாபனங்கள்; அவை ஆள்கிற கட்சியின் உடைமைகளல்ல; ஆள்கிற கட்சி என்பது அரசாங்கமும் அல்ல. ராஜ்ய அரசாங்கங்கள் பொதுச் சேவைத் துறைகளை ஒரு கட்சிக்கு மட்டும் பட்சமாக்கிக் கொண்டு விஷயங்கள் சேகரிப்பது அதருமம். இதை மிகவும் இரகசியமாகச் செய்து விடலாம். ஆனால் அதருமம் அதருமமே. ஜனநாயகத் தேர்தலின்படி வெற்றி பெற்று, ஐந்தாண்டுகளுக்கு மட்டுமே (நிரந்தரமாக அல்ல) அரசு வகிப்பவர்கள் முன்பு பிரிட்டிஷார் கையாண்ட முறைகளை இந்த அம்சத்தில் பின்பற்றக் கூடாது. இதை நான் பல முறை சொல்லியாகி விட்டது. என்றாலும் வெட்கமின்றி இவ்வழக்கத்தைத் தொடருவதால் நான் மீண்டும் கூற வேண்டியதாகிறது. எதிர்க்கட்சியினர் சம்பந்தப்பட்ட கடிதங்களைத் தபால் துறையினர் பிரித்துப் பார்ப்பதும் இது போன்றதே. கட்சிக் காரியத்துக்காகவும், சொந்தக் காரியத்துக்காகவும் கடிதங்களைப் பிரித்துப் படிப்பது ஒரு குற்றம். மற்ற நாடுகளாயின் இவ்வழக்கத்தைப் பின்பற்றும் ஆள்கிற கட்சி மீட்சியில்லாத அவமானத்துக்கு ஆளாகும். அந்நாடுகளில் கட்சி நலனுக்காகச் சர்க்கார் இலாகாவைப் பயன்படுத்திக் கொள்வதை போலீஸ் அதிகாரிகளும் தபால் துறை அதிகாரிகளுமே ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.


# SATYAM EVA JAYATE

*Rajaji's writings in SWARAJYA during 1962 and 1963 collected in Vol. III. Open any page in this book and you will find something relevant to present problems.*

**Rs. 6/-  556 pp**

Please contact your local agents for KALKI and SWARAJYA. Copies can also be had from all the Railway stalls of Ms. Higginbothams Private Limited

**BHARATHAN PUBLICATIONS PRIVATE LIMITED**

KALKI BUILDINGS, KILPAUK, MADRAS-10


❁ ❁ ❁

நமது நாட்டுக்குள் தீர்க்கப்பட வேண்டிய பயங்கர நெருக்கடிகள் பெருகி வரும்போது, அந்நிய நாட்டு விவகாரங்களைப் பற்றி விசாரப்படுவது அர்த்தமில்லாத காரியம் என்று தோன்றும். எனினும், வியட்நாமில் கம்யூனிஸ ஆதிக்கம் பரவாதபடி அமெரிக்கா நடத்தி வரும் போராட்டம் நமது விஷயங்களுக்குத் தொடர்புள்ளதேயாகும். எனவே, அதைத் தீர்க்கும் வழியைக் கவனிப்போம்.

அமெரிக்கா, ஜப்பான், ஆஸ்திரேலியா, இந்தியா, யுகோஸ்லாவியா ஆகிய நாடுகளின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு தருமகர்த்தச் சர்க்கார் (Trusteeship Government) தென் வியட்நாமில் ஏற்பட வேண்டும். அந்நாட்டின் சிவில் விவகாரங்களைச் சீரானபடி அமைத்துக் கவனித்துக் கொள்ளவும், அங்கு நடக்கும் அமெரிக்காவின் ராணுவ நடவடிக்கைகளுக்கு ஒரு நம்பகமான அடித்தளமாகவும் இந்தத் தருமகர்த்தச் சர்க்கார் பணி புரிய வேண்டும். இவ்வாறு ஓர் அரசாங்கம் அமைவதற்கு ஐ. நா. சபையில் அமெரிக்கா தீர்மானம் கொண்டு வந்து, அச்சபையின் அங்கீகாரத்தைப் பெற வேண்டும். ஐ.நா ஆதரவில் அமையக்கூடிய இச்சர்க்காரில் மேற்கூறிய நாடுகளோ இவை போன்ற மற்ற நாடுகளோ இடம் பெற்றால், 'காலனி ஏகாதிபத்தியம் உண்டாகி விடும்' என்ற ஐயத்துக்கு இடம் ஏறாது. தருமகர்த்தச் சர்க்காரை உரிய சமயத்தில் கலைத்து, எவ்வளவு சீக்கிரத்தில் இயலுமோ அவ்வளவில் ஜனநாயக அரசாங்கம் ஏற்பட வழி செய்வதாகத் தென் வியட்நாம் மக்களுக்கு வாக்குறுதி தர வேண்டும். இந்த நடவடிக்கைகளை எடுக்காவிடில் அமெரிக்கா 'தன் நோக்கத்தைப் பூர்த்தி செய்வது இப்போதைக்குச் சாத்தியமல்ல என்றே தோன்றுகிறது.

# * என் மேனியெழிலுக்கு ஆதரவு லக்ஸ் * என்கிறார் வைஜயந்திமாலா




மேனியழகு...
வைஜயந்திமாலாவுக்கு
எவ்வளவு முக்கியமோ
அவ்வளவு முக்கியம்
உங்களுக்கும்... எனவே
அதே கவனிப்புக்குரியது!

'என் போலவே உங்களுக்கும் முக்கியமானது மேனியழகு' என்கிறார் வண்ணமயில் வைஜயந்திமாலா, 'பெண்மையழகுக்கு அதுவே எழில் நிறைவு. மென்மையே உருவான செழு நுரையோடு கமகமவென்று என் மனம் கவரும் லக்ஸ் சோப்பை நீங்களும் உபயோகித்தாலென்ன? உங்கள் அன்றாட அழகுசாதனமாக விளங்கட்டும் லக்ஸ்!

லக்ஸ் டாய்லெட் சோப் சினிமா நட்சத்திரங்களின் தூய, மெல்லிய அழகுசாதன சோப்: வெண்மையிலும், வானவில்லின் 4 வண்ணங்களிலும் வரும் சோப்.

லின்டாஸ்— LTS. 189-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.




மன்னரின் ஆணைப்படி அண்டாவும் நூறு படி பாலும் வந்து சேர்ந்தன. பாலை அண்டாவில் ஊற்றும்படி கேட்டுக் கொண்டாள் சிறுமி. அதன்படி அண்டாவினுள் நூறு படி பாலும் ஊற்றப் பட்டது. சிறிது நேரம் சென்றதும் அண்டாவினுள் பால் அசைவின்றி இருந்தது.

''மகாராஜா! இந்த அண்டாவில் உள்ள பாலில் நெய் இருக்கிறது. அது உங்கள் கண்களுக்குத் தெரிகிறதா, பாருங்கள்'' என்றாள் சிறுமி.

அண்டாவினுள்ள பாலை உற்று நோக்கினார் மன்னர். பால்தான் கண்களுக்குத் தெரிந்ததே யன்றி நெய்யைப் பார்க்க முடியவில்லை. ''நெய்யைப் பார்க்க முடியவில்லையே?'' என்று கூறினார்.

''பாலில் உள்ள நெய் உங்கள் கண்களுக்குத் தெரியவில்லை. எனவே பாலில் நெய் இல்லை என்று சொல்லி விட முடியுமா? உங்கள் முதல் கேள்வி 'கடவுள் எங்கே இருக்கிறார்' என்பதுதானே? பாலில் நெய் எங்கே இருக்கிறது? மேலே இருக்கிறதா? கீழே இருக்கிறதா? மத்தியில் இருக்கிறதா? சொல்லுங்கள் மகாராஜா!'' என்றாள் சிறுமி.

''பாலில் எங்கும் நெய் இருக்கிறது'' என்றார் அரசர்.

திருமுருக
கிருபானந்தவாரியார்

''பாலில் எங்கும் நெய் இருப்பது போல, கடவுள் அங்கிங்கெனுதபடி எங்கும் இருக்கிறுர்'' என்று கூறினுள் சிறுமி.

''அம்மா! நீ சொன்னது போல் தெளிவாகவும், விளக்கமாகவும் இது வரை யாரும் சொன்னதில்லை. அவர் சொன்ஞர், இவர் சொன்ஞர் என்று தான் கூறினுர்கள். உன்னுடைய விடை எனக்குப் பூரண திருப்தியளித்தது'' என்ருர் மன்னர்.

''மகாராஜா! உங்கள் இரண்டாவது கேள்வி என்ன?''

''கடவுள் எந்தத் திசையைப் பார்த்துக் கொண்டிருக்கிறுர்?''

''மகாராஜா! ஒரு பீடத்தை என் அருகில் கொண்டு வந்து போடச் சொல்லுங்கள்'' என்று கூறினுள் சிறுமி.

மன்னர் ஆணையிட, அதன்படி ஒரு பீடம் கொண்டு வந்து போடப்பட்டது. அதன் மீது விளக்கை ஏற்றி வைக்கும்படி சிறுமி கேட்டுக் கொண்டாள். அதன்படி செய்யப்பட்டது.

''மன்னர்பெருமானே! இந்த விளக்கின் திரி எந்தப் பக்கம் பார்த்து எரிகிறது?'' என்று கேட்டாள் சிறுமி.

மன்னர் திரியை உற்று உற்றுப் பார்த்தார். ''திரி எல்லாப் பக்கங்களிலும் எரிகிறது'' என்று கூறினுர்.

''திரி எல்லாப் பக்கங்களிலும் எரிவது போல, கடவுள் எல்லாப் பக்கங்களையும் பார்த்துக் கொண்டிருக்கிறுர்!'' என்று சிறுமி கூறினுள்.

''அம்மா! நீ சொன்னது போல் இவ்வளவு தெளிவாக சாஸ்திரங்களில் கூடச் சொல்லப்பட வில்லையே. ஆஸ்தான வித்வானின் பேத்தியாகிய சிறு குழந்தையே இப்படிச் சொன்னுல், ஆஸ்தான வித்துவான் எப்படிச் சொல்லுவாரோ?'' என்று வியந்து கொண்டார் மன்னர். அந்த அவையில் ஆஸ்தான வித்துவான் நடுங்கிக் கொண்டே நிற்பது மன்னருக்கு எப்படித் தெரியும்?

''மகாராஜா! உங்கள் மூன்ருவது கேள்வி என்ன?''

''கடவுள் என்ன செய்து கொண்டிருக்கிறுர்?—இதுதான் மூன்ருவது கேள்வி.''

''மகாராஜா! இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமானுல் பதினைந்து நிமிடங்கள் நான் ராஜாவாக நடிக்க வேண்டும். அதற்கு அனுமதி கொடுங்கள்.''

''அப்படியே.''

சிறுமி மகாராஜாவாக நடித்தாள். 'ஆக்டிங்' மகாராஜா உத்தரவு போடத் தொடங்கினுர்.

''மந்திரிகளைப் பிடித்துச் சிறையில் போடு. மன்னரைக் கைது செய். ஏழைகளுக்குப் பணத்தை அள்ளிக் கொடு!''

''இதெல்லாம் என்ன?'' என்று கேட்டார் மன்னர்.

''அதுவா? குப்பைமேடு கோபுரம் ஆகிறது. கோபுரம் குப்பை மேடு ஆகிறது. ஆண்டவன் செய்கிற வேலை இதுதான்'' என்று கூறினுள் சிறுமி.

அரசர் நேராக ஆஸ்தான வித்துவானிடம் ஓடிப் போய் அவரது காலில் விழுந்தார்.

சேக்கிழார் பெருமானின் வரலாற்றிலும் இத்தகைய நிகழ்ச்சி இடம் பெற்றுள்ளது. அக்காலத்து அநபாயச் சோழர், சோழவள நாட்டை இனிது அரசு புரிந்து வந்தார். அம்மன்னர் பெருமான் அன்பும், அறனும், வாய்மையும், தூய்மையும், வீரமும், தீரமும் உடையவர். அம்மன்னரிடம் அருண்மொழித் தேவரின் தந்தையார் அமைச்சராக இருந்தார். அம்மன்னர் ஒரு சமயம் அமைச்சரிடம், ''மலையினும் பெரியது எது? உலகினும் பெரியது எது? கடலினும் பெரியது எது?'' என்ற மூன்று வினுக்களை வினவி, ''இவ்வினுக்களுக்கு





நாளை நீங்கள் விடை கூறவேண்டும்'' என்று பணித்தார்.

சேக்கிழாரின் தந்தையார், வீட்டுக்கு வந்து கேள்விகளுக்கான விடை பற்றிச் சிந்தித்துத் தெளிவு காணாமல் வாட்ட முற்றிருந்தார். கலை பயின்று வந்த இளம் சேக்கிழார் தந்தையாரின் தாள் களைத் தொழுது, ''தந்தையே! ஏன் தங்களுடைய திருமுகம் சோர்ந்திருக் கிறது?'' என்று வினவினார். அவர் மன்னர் வினவிய வினாக்களைக் கூறி அவற்றுக்கு விடை அறியாது வருந்துவதாகத் தெரி வித்தார். அது கேட்ட சேக்கிழார் பெருமான் புன்முறுவல் பூத்து, ஏடும் எழுத்தாணியும் எடுத்துத் திருவள்ளுவ ரது திருக்குறளிலிருந்து மூன்று குறட் பாக்களை விடையாக எழுதித் தந்தையா ரிடம் கொடுத்தார்.

சேக்கிழார் பெருமான் எழு திக் கொடுத்த மூன்று குறட் பாக்களை அமைச்சர் எடுத்துச் சென்று அரசரிடம் கொடுத் தார். அவ்விடையைப் படித்த சோழ மன்னர் பெரிதும் மகிழ்ந்தார். ''மூன்று கேள்வி களுக்கும் திருக்குறளிலிருந்தே விடை கண்ட திறம் வியக்கத் தக்கது'' என்று பாராட்டினார்.

''அரசே! இங்ஙனம் விடை கண்டது அடி யேனன்று: அடியே னது புதல்வன்

அருண்மொழித் தேவனே இவ்விடை கண்டவன்'' என்று அமைச்சர் கூறினர்.

மன்னர் அதிசயித்து அக் குறள்களை மீண்டும் படித்தார்.

**நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது.**
**காலத்தினுற் செய்த நன்றிசிறிது எனினும்**
**ஞாலத்தின் மாணப்பெரிது.**
**பயன்தூக்கார் செய்தஉதவி நயன்தூக்கின்**
**நன்மை கடலிற்பெரிது**

பிறகு மன்னன் அமைச்சரின் அரும் புதல்வரைக் காண விரும்பி, ''அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்'' என்றபடி எல்லா வகையான விருதுகளும் அனுப்பி, அருண்மொழித் தேவரை அரசவைக்கு அழைத்து வந்து மிகவும் உபசரித்து முதன் மந்திரி பதவியை நல்கினர்.

அருண்மொழித் தேவர் மிக மிகத் திறமையுடன் அமைச்சுத் தொழிலை நடத்தி எங்கும் அறநெறி பரப்பினர். சேக்கிழார் பெருமானின் அறிவாற்றலைக் கண்ட அநபாயர் மிகவும் மகிழ்ந்தார். செங்கோல் ஒச்சும் தலைமையையும் 'உத்தமச் சோழப் பல்லவர்' என்ற பட்டமும் அருண்மொழித் தேவருக்குக் கொடுத்தார்.

மதி நலமும், ஒழுக்க நலமும், அன்பு நலமும் உடையவராய் விளங்கிய சேக்கிழார் பெருமானுக்குச் சோழ நாட்டில் உள்ள திருநாகேச்சுவரம் என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானிடத்து அளவற்ற அன்பு விளைந்தது. அப்பெருமானையே தமது வழிபடு மூர்த்தியாகக் கொண்டார். அதனல் தமது பிறப்பிடமாகிய குன்றத்தூரிலே மாட வீதியும், திருக்கோயிலும் திருநாகேச்வரத்தில் உள்ளது போலவே அமைத்து அதற்குத் திருநாகேச்வரம் என்று பெயரிட்டு நித்திய நைமித்திக வழிபாடுகள் புரிந்து மகிழ்ந்து வந்தார்.

மன்னரின் இலக்கணங்களை வரையறை செய்வோர் மந்திரிகள். அமைச்சர்கள் அரசனை நற்புத்தி கூறித் தரும மார்க்கத்தில் அடக்கி ஆள வேண்டும். மன்னன் சொல்வதற்கெல்லாம்'ஆமாம்' போட்டு அவன் செல்லுகின்ற வழியிலேயே அமைச்சர்கள் செல்லக்கூடாது. மன்னன் தவறான வழியில் செல்லும் போது மந்திரி இடித்துக் கூறித் திருத்த வேண்டும்.

**''இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பார் இலானும் கெடும்''**

என்பர் திருவள்ளுவர். நடப்பதைக் கொண்டு நடக்கவிருப்பதை அமைச்சர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். ஆதலால்தான் 'மந்திரிக்கழகு வரும் பொருள் உரைத்தல்' என்று கூறினர்கள். அவை திறப்பதும், சாலை திறப்பதும் அமைச்சருக்குரிய தொழில்கள் அல்ல. மக்களுக்கு நீதி வழங்கி அவர்களை அறநெறியில் வாழ வைப்பது அமைச்சரின் கடமையாகும். இந்தத் தருமத்தில் தமக்கு நிகர் எவருமின்றித் திகழ்ந்தவர் சேக்கிழார் பெருமான்.

சேக்கிழார் பெருமானை அமைச்சராகக் கொண்ட அநபாயச் சோழ சக்கரவர்த்திக்கு அபயன், குலோத்துங்கன் என்ற பெயர்களும் இருந்தன. இதனைச் சேக்கிழாரே கூறியிருக்கிறர்.

**சென்னி யபயன் குலோத்துங்கச்**
**சோழன் தில்லைத் திருவெல்லை**
**பொன்னின் மயமாக் கியவளவர்**
**போரே றென்றும் புவிகாக்கும்**
**மன்னர் பெருமான் அநபாயன்**

என்று சண்டேசுர நாயனர் புராணத்திலே வருகிறது.

அந்த அநபாய மன்னர் தமிழ் மொழியின் அருமைக்காகச் சிற்றின்பப் பகுதி நிறைந்த திருத்தக்க தேவரின் சிந்தாமணியைப் படித்து மகிழ்ந்தார். அதனை மெய்ந்நூல் என்று எண்ணினர்.

''ஜைனர்கள் துறவிகள். துறவிகளாகிய அவர்கள் இன்பத் துறையைப் பாட முடியுமா?'' என்று கேட்டதனல் இன்பத் துறையே நிறைந்த சீவக சிந்தாமணியைப் புனைந்துரையாக இயற்றினர் திருத்தக்க தேவர். இன்பத் துறை பாட ஜைனத் துறவிகளுக்கும் வன்மை உண்டு என்று காட்டுவதற்காக எழுந்த நூல் அது.

கந்த புராணம் சிவ நூல்; அதில் முழுக்க முழுக்கச் சிவபெருமானைப் பற்றித்தான் வருகிறது. பாரதம் அறநூல்; அறம்தான் பாரதம். விதியை — ஊழ் வினையை வற்புறுத்தும் விதி நூல் சிலப்பதிகாரம். அவ்வாறு வகைப்படுத்திப் பார்க்கும்போது சீவக சிந்தாமணி இன்ப நூல். இந்த நூலைத்தான் இடையறாது படித்தார் அநபாயன்.

தமிழின் இனிமை கருதிக் காமச் சுவை நிரம்பிய சிந்தாமணி என்னும் நூலை மற்ற சைவ சமயிகள் கற்று வந்ததைக் கண்ட சேக்கிழார் வருந்தினர். அவர்களது அச்செயல் நெற்குத்தி புண்ணுது உமி குத்தி வருந்துவது போலும்; கறவைப் பசு நிற்க மலட்டுப் பசுவைக் கறந்து உளந் தளர்வது போலும்; பூஞ்சோலை வழியிருக்கக் குழியில் விழுந்து, சேற்றில் சிக்கித் தவிப்பது போலும்; கரும்பிருக்க இரும்பை மென்று பல் உடைத்துக்கொள்வதுபோலும்; விளக்கு இருக்க மின்மினியை நாடுவது போலும் அவருக்குத் தோன்றியது.

''கலகமிடும் அமணமுருட்டுக்
கையர் பொய்யே
கட்டிநடத் தியசிந்தா
மணியை மெய்யென்
றுலகிலுளோர் சிலர் கற்று
நெற்குத் துண்ணு
துமிக்குத்திக் கைவருந்திக்
கறவை நிற்க
மலடுகறந் துளந்தளர்ந்து
குளிர்பூஞ் சோலை
வழியிருக்கக் குழியில் விழுந்
தளறு பாய்ந்து
விலைதருமென் கரும்பிருக்க
இரும்பை மென்று
விளக்கிருக்க மின்மினித்தீக்
காய்ந்து நொந்தார்.''

அரசனைத் திருத்துவது அமைச்சருடைய கடமையன்றோ? ''அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்.'' கூன் பாண்டியன் சமண சமயம் புகுந்ததனால் பாண்டிய நாடும் அச்சமண இருளால் மூடப்பட்டது. ஆதலின் தருமத்தை எடுத்துரைத்து, அரசனைத் திருத்தி நல்வழிப்படுத்தினால் அனைவருமே திருந்துவர் என எண்ணினார் அருண்மொழித் தேவர். தருமத்தை எடுத்துச் சொல்லும்போது பதவி என்ன பிரமாதம்?

தம்முயிர்க் குறுதி யெண்ணார்
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
விடாதுநின் றுரைக்கும் வீரர்

என்று அல்லவா அமைச்சரின் தன்மையைக் கூறுகிறார் கம்பர்?

சேக்கிழார் பெருமான் மன்னரிடம் சென்றார். ''அரசரேறே! தாங்கள் தெய்வ நலமிக்க சைவ சமயியாயிருந்தும் இருமைக்கும் நன்மை செய்யாத அவகதையைக் கேட்டு வாணாளை வீணுக் கழிக்கின்றீர்களே! இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைக்கும் நன்மை பயக்கும் சிவகதையைக் கேட்டு உயிர்க்கு உறுதி தேடுங்கள்'' என்று எடுத்துரைத்தார்.

அநபாய மன்னன் திருந்துகின்ற உள்ளம் படைத்தவன். ஆகவே, சேக்கிழாரிடம், ''அமைச்சர் பெருமானே! இது அவகதையாயின் சிவகதை யாது? அதன் அருமையும், பெருமையும் யாவை? அதனைக் கூறுங்கள்'' என்றார்.



''வேந்தரே! திருவாரூரிலே கருமூல மகற்றுந் திருமூல நாதராம் சிவபெருமான் அடியெடுத்துக் கொடுக்க, சமய குரவர் நால்வருள் ஒருவராகிய சுந்தர மூர்த்தி நாயனார் பதினொரு பாக்களால் திருத்தொண்டத் தொகை பாடியருளினார். அத் திருத் தொண்டத் தொகைக்குத் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் பொருள் கூற, அப் பிள்ளையாரி

டம் இளமையிலேயே வேதாகமங்களைக் கேட்டிருந்த நம்பியாண்டார் நம்பி வகையாக ஓர் அந்தாதி பாடியருளினார்'' என்றார் சேக்கிழார் பெருமான்.

சோழ மன்னர் நம்பியாண்டார் நம்பி எவ்வாறு அந்தாதி பாடினார் என்பதை அறிய எண்ணி அது பற்றி வினவினார். சேக்கிழார் அம்மன்னருக்குக் கூறலானார்.

''திருநாரையூரில் பொல்லாப் பிள்ளையார்க்குப் பூசனை புரியும் ஆதி சைவக் குடும்பம் இருந்தது. சைவ சமயம் வாழ அக்குடும்பத்தில் ஒரு நற்றவப் புதல்வர் பிறந்தருளினார். ஒரு நாள் அக்குடும்பத் தலைவர் வெளியூருக்குச் செல்ல நேர்ந்தது. ஆதலால் பிள்ளையாருக்குப் பூசனை புரியும்படி தம் புதல்வருக்குக் கட்டளையிட்டார். தந்தையார் கூறியபடியே பிள்ளையாருக்குப் பூசனை புரியச் சென்றார் புதல்வர். அந்த இளைஞர் பிள்ளையாருக்குத் திருமஞ்சனம் முதலிய எல்லாம் செய்து வைத்துத் திருவமுதினைத் திருமுன் வைத்தார். ''எம்பெருமானே! திருவமுது செய்ய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். ஆயினும் பிள்ளையார் அவ்வேண்டுகோளுக்கு இணங்கித் திருவமுது செய்யவில்லை. அதனால் வருந்திய இளைஞர் தமது தலையைக் கல்லிலே மோதிக் கொள்ள முயன்றார். அந்தக் கணமே பொல்லாப் பிள்ளையார், ''நம்பி, பொறு!'' என்று சொல்லித் தடுத்துத் திருவமுது செய்தார். அக்காட்சியைக் கண்டு மிகவும் மகிழ்ந்த இளைஞர் ''பெருமானே! பள்ளி செல்வதற்கு இன்று நேரங் கடந்து விட்டது. நேரங்கடந்து நான் பள்ளிக்குச் சென்றால் எங்கள் ஆசிரியர் அடிப்பார். ஆதலால், தேவரீரே! அடியேனுக்குக் கலைகள் எல்லாவற்றையும் ஓதுவிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். பிள்ளையார் மனமிரங்கி எல்லாக் கலைகளையும் இளைஞருக்கு ஓதுவித்தருளினார். இவ்வாறு பொல்லாப் பிள்ளையாரின் திருவருட் கடாட்சம் பெற்றதால் அவர் நம்பியாண்டார் நம்பி என்று அழைக்கப்பட்டார். இவர் தம்மை ஆட்கொண்ட பொல்லாப் பிள்ளையார்மீது 'திருவிரட்டை மணிமாலை' என்னும் தமிழ்ப் பிரபந்தம் பாடினார்.

பொல்லாப் பிள்ளையாரிடம் நம்பியாண்டார் நம்பி திருவருட் கடாக்ஷம் பெற்ற செய்தி யறிந்த இராசராச மன்னன் பொல்லாப் பிள்ளையாரை வழிபட நிவேதனப் பொருள்களுடன் திருநாரையூர் வந்தான். நம்பியாண்டார் நம்பியை வணங்கினான். ''இங்கு கொண்டு வந்துள்ள நிவேதனப் பொருள்களைப் பொல்லாப் பிள்ளையார் திருமுன் படைக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டான். அன்பினால் படைத்தவற்றைப் பிள்ளையார் திருவமுது செய்தருளினார்.

மன்னன் மகிழ்ந்து, ''சமய குரவர் மூவர் அருளிச் செய்த தேவாரத் திருமுறைகளும் இப்பூவுலகில் நிலைபெறுவதற்கு வகை செய்ய வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டான். மன்னனின் வேண்டுகோளுக்கு இணங்கிய நம்பியாண்டார் நம்பி பொல்லாப் பிள்ளையாரை வணங்கினார். ''எம்பெருமானே! தேவாரத் திருமுறைகள் இருக்குமிடத்தையும், திருத் தொண்டர்களின் வரலாறுகளையும் அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும்'' என்றார்.

''தொண்டனே! தில்லைப் பொன்னம்பலத்தின் அருகே தேவார ஆசிரியர்கள் மூவருடைய கைகளின் இலச்சினையுள்ள அறையில் தேவாரத் திருமுறைகள் வைத்துப் பூட்டப்பட்டுள்ளன'' என்று அறிவித்த பொல்லாப் பிள்ளையார் நம்பியாண்டார் நம்பிக்குத் திருத் தொண்டர்களுடைய வரலாறுகளையும் திருவாய் மலர்ந்தருளினார்.

அதனைக் கேட்டு மகிழ்ந்த நம்பியாண்டார் நம்பியும் மன்னனும் தில்லையையடைந்து தேவாரத் திருமுறைகள் இருக்கும் அறையைத் திறக்கும்படி வேண்டிக் கொண்டார்கள்.

''தேவார ஆசிரியர்கள் மூவரும் வந்தாலன்றி அவ்வறையைத் திறக்க இயலாது'' என்று தில்லை வாழ் அந்தணர்கள் தெரிவித்தார்கள்.

உடனே மன்னன் தில்லைப் பெருமானைச் சேவித்துச் சிறப்புடன் பூசனை நடத்தினான். தேவார ஆசிரியர் மூவர் திருவுருவங்களுக்கும் வழிபாடு செய்து அத் திருவுருவங்களைத் திருவீதிகளில் எழுந்தருளச் செய்தான். அவ்வுருவங்களைத் திருப்பதிகங்கள் வைத்துப் பூட்டப் பெற்ற அறையின் முன்னே கொண்டு வந்து நிறுத்தி, ''மூவரும் வந்து விட்டனர்; அறையைத் திறவுங்கள்'' என்று கூறினான். அரசனின் அறிவுடைமையை அந்தணர் போற்றினர். அறை திறக்கப்பட்டது. உள்ளே சென்று பார்த்தபோது தேவாரப் பதிகங்கள் உள்ள ஏடுகள் கரையான் புற்றினால் மூடப்பட்டுச் சிதைந்திருந்தன. அவற்றை வெளியில் கொண்டு வந்து சோதித்துப் பார்த்தபோது, பெரும்பாலான ஏடுகள் பழுதடைந்திருந்தன. மன்னன் அளவிலாத் துயரம் கொண்டான். (தொடரும்)




புன்னகை பொலியும் உவகைத் தோற்றம்...
...இளமையும் எழிலும் தவழும் இளநோக்கு
இவற்றுடன் இணைந்த

கட்டாவ்

வாயில்கள்

தி கட்டாவ் மகன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கோ. லிட். தலைமை ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்டு எஸ்டேட், பம்பாய்-1
மில்கள்: டெலிஸ்ல் ரோடு, பைகுல்லா, பம்பாய்-27 மொத்த விற்பனைக் கடை: கோவிந்த்சவுக், முல்ஜி ஜேதா மார்கெட், பம்பாய்-2
சில்லறை விற்பனைக் கடை: 216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை-1

SISTA'S Kme-358

# ஆழ்கடலில் அரியசாதனை

வாழ்க்கையில் வழக்கறிஞராக விளங்கும் வங்காளத்தைச் சேர்ந்த திரு மிஹிர்சேன் சமீபத்தில் தலைமன்னார் - தனுஷ்கோடியை இணைக்கும் பால்க் ஜலசந்தியை நீந்திக் கடந்து தமக்கு நிகரில்லாப் புகழைத் தேடிக்கொண்டிருப்பவர். மூன்று குழந்தைகளுக்குத் தகப்பனாராகி முப்பத்தி ஆறு வயதை எட்டிப் பிடித்திருக்கும் மிஹிர்சேன் துணிச்சலான இந்தச் செயலை மேற்கொண்டு வெற்றியடைந்ததின் மூலம் பாரத இளைஞர்களின் உள்ளங்களில் நிரந்தர இடம் பெற்றதோடல்லாமல் அவர்களுக்கு வீரதீரச் செயல்களில் ஆர்வம் தோன்ற வழியையும் காண்பித்திருக்கிறார்.

★ ★ ★

"நீங்கள் இங்கிலீஷ் கால்வாயையும் நீந்திக் கடந்திருக்கிறீர்கள். இப்போது பால்க் ஜலசந்தியையும் கடந்திருக்கிறீர்கள். இந்த இரண்டு அனுபவங்களுக்கு மிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைச் சொல்ல முடியுமா?"

"1958ம் ஆண்டு செப்டம்பர் மாதம் இருபத்தி ஐந்தாம் தேதியன்று நான் இங்கிலீஷ் கால்வாயைக் கடந்தேன். இந்த ஆண்டு ஏப்ரல் ஐந்தாம் தேதி பால்க் ஜலசந்தியைக் கடந்தேன். இந்த இரண்டு நீர்ப்பரப்புகளையும் கடந்த முதல் இந்தியப் பிரஜை என்ற ஒரே ஒற்றுமையைத் தவிர இந்த இரண்டு நீர்ப்பரப்புகளிலும் வேற்றுமைகள்தான் அதிக இடம் பெறுகின்றன.

"இங்கிலீஷ் கால்வாய் ஏற்கனவே பல நீச்சல் விற்பன்னர்களால் புகழ் பெற்றுவிட்டது. அமைதியான நீர்ப்பரப்பு. ஆவேசமான அலைகள் குறைவு. நீர் மட்டத்தின் கீழ் வேகமாகக் குறுக்கேயும் நெடுக்கேயும் செல்லும் நீர் ஓட்டங்கள் (Currents) கிடையாது. அங்கு நீந்தப் போகிறவர்களுக்காக விசேஷ வானிலை அறிக்கை கொடுக்க ஸ்தாபனங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன. சுறாமீன், விஷப் பாம்பு முதலியவை கிடையாது. அங்கு நான் நீந்த ஆரம்பித்ததும் அதிகமான குளிர்ச்சியினால்தான் பாதிக்கப்பட்டேன். கைகால்கள் மரத்துப் போயின. ஆனால் அவைகளை விடாமல் அசைத்து இயக்கிக் கொண்டிருந்ததால் உடலில் தானாகவே தோன்றும் சூடு அந்தக் கடுங்குளிரைத் தாக்குப் பிடித்தது. ஓரளவு அங்கு என் திட்டப்படி என் முயற்சியும் வெற்றி பெற்றது.

"ஆனால் தலைமன்னார், தனுஷ்கோடி இடையில் உள்ள நீர்ப்பரப்பு பிரும்மாண்டமான அலைகளுக்கும் வேகமான நீரோட்டங்களுக்கும் புகழ் பெற்றது. சுறாமீன்கள், விஷப் பாம்புகள் முதலியவற்றுக்கும் பஞ்சமில்லை. கடல் தண்ணீர் இங்கு சீக்கிரமே சூடாகிவிடுகிறது. இங்கிலீஷ் கால்வாய் நீரைவிட இந்த பால்க் ஜலசந்தி நீர் அதிக உப்புக் கரிக்கும் தன்மை வாய்ந்தது. வானிலை அறிவிப்புக்களுக்காக இந்தச் சந்தர்ப்பத்தில்தான் விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இங்கு உஷ்ணத்தினாலும் சக்தி வாய்ந்த அலைகளினாலும் அதிக உப்புக் கரித்தலாலும் நான் அதிக சிரமத்துக்கு உள்ளானேன். ஆனால் இந்த முயற்சியை நானே முழு மனத்துடன் ஏற்றுக் கொண்டிருந்ததால் இந்தச் சோதனைகளெல்லாம் என் மனோதிடத்தை அதிகப்படுத்தின. என் கணக்கில் நேரம் ஒன்றுதான் அடங்கவில்லை. பன்னிரண்டு அல்லது அதிக பட்சம் பதினைந்து மணி நேரமாகும் என்று கணக்கிட்டேன். ஆனால் கடைசியில் கிட்டத்தட்ட இருபத்தி ஆறு மணி நேரம் ஆகிவிட்டிருந்தது."

"நீங்கள் என்ன காரணத்துக்காக இந்த பால்க் ஜலசந்தியைத் தேர்ந்தெடுத்தீர்கள்?"

"நம் பாரதத்துடன் இணைந்தது என்ற ஒரே காரணத்துக்காகத்தான். இங்கிலீஷ் கால்வாயை ஏற்கனவே பலர் கடந்து, அதற்குப் பிராபல்யத்தைத் தோற்றுவித்து விட்டார்கள். அது போல் நம் பாரதத்துடன் இணைந்த ஒரு நீர்ப் பரப்புக்கு நான் என் முதல் முயற்சியால் பிராபல்யம் தேடித்தர விரும்பினேன். மேலும் இந்த இடம் ராமாயண காவியத்தின் மூலம் புகழ் பெற்ற இடம் அல்லவா!

"நீங்கள் கடலில் தனியாகவே நீந்தி வந்தீர்களா? அல்லது உங்களுக்குத் துணையாக வேறு யாரும் கூடவந்தார்களா?"

"எனக்குத் துணையாக ஒரு படையே நான்கு பக்கங்களிலும் நிறைய இடைவெளி விட்டுச் சூழ்ந்து வந்தது. என்னுடன் போட்டி போட்டுக் கொண்டு யாரும் நீந்தி வரவில்லை. நீராவிப் படகுகளிலும் சிறு படகுகளிலும் பலர் வந்தார்கள். அவ்வப்போது சிலர் நீரிலும் மூழ்கிப் பக்கத்தில் வந்தார்கள். எனக்குச் சுறா மீன்களிடத்திலிருந்தும், விஷ நீர்ப் பாம்புகளிடமிருந்தும் ஆபத்து ஏதும் நேராமலிருக்கக் கடற் படையினர் வெகு நல்ல முயற்சிகள் எடுத்துக் கொண்டார்கள். அப்படியும் என் நண்பர்கள் இரண்டு சந்தர்ப்பங்களில் என்னை நெருங்கிய விஷப் பாம்புகளைச் சுட்டுக் கொல்ல வேண்டியிருந்தது. ஒரு சந்தர்ப்பத்தில் எனக்குச் சற்றுத் தூரத்தில் துணையாக நீந்தி வந்து கொண்டிருந்தவர், ஒரு பாம்பைப் பார்த்துப் பயந்து எகிறி அதன் மேலேயே போய் விழுந்தார். நல்ல வேளை! பாம்பு பயந்து மூழ்கிவிட்டது!"

"இந்த முயற்சியின்போது நீங்கள் மனச்சோர்வு அடைந்த கணம் ஏதாவது உண்டா? அதுபோல் அதிக உற்சாகமடைந்த கணமும் உண்டா?"

"ஆஹா!... 'அதோ விளக்குகள் கரையில் தெரிகின்றன. நாம் தனுஷ்கோடியை நெருங்கிவிட்டோம். இன்னும் இரண்டே மைல்கள்தான். இப்போது மணி இரவு

ஏழுமைரதான்! ஆனந்தமாக அலுப்புத் தீர இன்று இரவு தூங்கலாம்' என்று நினைத்து ஆனந்தப்பட்ட வேளையில் 'ஐயா! நீ வழியைக் கோட்டை விட்டு விட்டு எங்கேயோ ஒதுங்கி வந்துவிட்டாய். அந்த விளக்கு ஒளி ராமேசுவரத்தை ஒட்டி நிற்கும் 'கொங்கன்' என்ற மரக்கலத்திலிருந்து வருகிறது. நீ போக வேண்டிய தனுஷ்கோடிக் கடற்கரை இன்னும் ஆறு மைல் தூரத்தில் அல்லவா இருக்கிறது' என்று கடற் படை அதிகாரி சொன்னபோது நான் அப்படியே அயர்ந்து போய் விட்டேன். எப்படியோ வழி தவறிவிட்டிருக்கிறது! அந்த ஆறு மைல் தூரத்தைக் கடக்க நான் என்ன பாடு பட்டிருக்கிறேன்! அதை இப்போது நினைக்கும்போது சிரமம் அதிகமாகத் தெரிகிறது.

''அதேபோல் காலை ஏழு மணி சுமாருக்குக் கரையை எட்டிக் காலைத் தரையில் பதித்துச் சில கஜ தூரம் நடந்து மணற் பரப்பிற்கு என்னை வரவேற்க மேள தாளத்துடன் காத்திருந்த பொதுமக்களிடையே வந்தபோது வெகு நாட்களாகப் பிரிந்திருந்த தாயின் மடியில் வந்து வீழ்ந்த உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது.

''பெருமிதம் பெருக்கெடுத்தோடிய மற்றொரு கணமும் உண்டு. வெற்றி கண்ட என்னைப் பாராட்ட ராமநாதபுரம் சமஸ்தான அரண்மனையில் அன்று நள்ளிரவில் ஒரு சிறு கூட்டம் கூடியிருந்தது. சேதுபதி அவர்கள் என்னைப் பாராட்டினார்கள். இதே அரண்மனையில்தான் சுமார் எழுபத்தி ஐந்து வருடங்களுக்கு முன் ஒரு நாள் கடல் கடந்து போய் வெளி நாட்டவர் உள்ளங்களில் பாரதத்துக்கு ஒரு தனி இடத்தை ஒதுக்கச் செய்து திரும்பி வந்த சுவாமி விவேகானந்தருக்கு வரவேற்பு நடந்தது என்று பக்கத்திலிருந்த நண்பர் ஒருவர் சொன்னார். அப்போது என் உடம்பு புல்லரித்தது.''

**''இருபத்தி ஆறு மணி நேர அளவுக்குத் தண்ணீரிலேயே இருந்திருக்கிறீர்களே! உங்கள் உடல் நிலையும் உள்ள நிலையும் பாதிக்கப்படவில்லையா?''**

''இந்த மாதிரி சாகசச் செயல்களுக்கு உடல் வலு மாத்திரம் இருந்தால் போதாது. அதைவிடப் பன்மடங்கு உள்ளத்தில் வலு இருக்க வேண்டும். ஒன்றுக்கு ஒன்று துணையாக நிற்கும்போதுதான் வெற்றி கிட்டும். நான் நீந்த ஆரம்பித்த சில மணி நேரங்களுக்குள்ளாகவே வெப்பத்தினால் கடல் நீர் சூடாகி விட்டது. உப்பு அதிகரிப்பினால் என் உதடு தொண்டை எல்லாம் பாதிக்கப்பட்டு வீங்கி விட்டன. பூகோள ரீதியில் நான் நீந்திக் கடக்க வேண்டிய தூரம் இருபது மைல்களே யானாலும், நான் ஏறத்தாழ ஐம்பது மைல்கள் நீந்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. நீர் ஓட்டங்களும், ராட்சத அலைகளும் என்னைப் பல தடவைகளில் வழியை விட்டுத் தள்ளி ஒதுக்கின. ஒரு கட்டத்தில் ஐந்து மைல்களுக்கும் மேலாக ஒதுக்கப்பட்டேன். அவ்வப்போது ஐஸ் கலந்த தண்ணீரை உட்கொண்டும், தலையில் ஊற்றிக் கொண்டும் உஷ்ணத்தைச் சமாளித்தேன். இந்தச் சூழ்நிலைகள் என் உடலைத் தளரவைத்தன. ஆனால் பாரதத்தின் நாற்பது கோடி மக்கள் நினைவும் என் வெற்றியினிடத்தில் பதிந்திருக்கிறது என்று என்கூட வந்த நண்பர்கள் உற்சாகப்படுத்தியபோது என் உடல் வலியை நான் மறந்தேன். இரவு மூன்று மணிக்கு மேல் உடலில் மீண்டும் புதுத் தெம்பு பிறந்தது. கரையை அடைந்த பதினைந்தாவது நிமிடத்தில் ஜனாதிபதியின் பாராட்டுச் செய்தியை எனக்குத் தெரிவித்தார்கள். உடல் வலியெல்லாம் பறந்து விட்டது. அப்போதும் என் உடலில் மேலும் ஐந்து மணி அவகாசம் நீரில் இருக்கும் சக்தி இருந்தது என்றுதான் தோன்றியது.''

**''உங்களுடைய இந்தத் தீரச் செயல் இளைஞர்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமையுமா?''**

''அமைய வேண்டும் என்பதுதான் என் அவா. மேலை நாடுகளில் பல ஸ்தாபனங்கள் கால்வாய் கடத்தல், மலை ஏறுதல் போன்ற முயற்சிகளில் ஈடுபடுபவர்களுக்கு நல்ல விதத்தில் உதவி செய்கின்றன. அது போல் நம் நாட்டிலும் ஸ்தாபனங்கள் நிறுவப்பட வேண்டும்.''

**''இதற்கு முன் இலங்கையிலிருந்து தமிழ் நாட்டுக்கு இரண்டு பேர் நீந்தி வந்திருக்கிறார்களே! அவர்கள் அனுபவத்திலிருந்து நீங்கள் ஏதாவது தெரிந்து கொண்டீர்களா?''**

''அவர்கள் பால்க் வளைகுடாவைத்தான் நீந்திக் கடந்தார்கள். நான் நேராக ஜலசந்தியைத் தேர்ந்தெடுத்தேன். அதனால்தான் நெருங்கி வந்த ராமேசுவரக் கரையை அடையாமல் மேலும் பத்து மணி நேரத்துக்கு அதிகமாக நீந்த வேண்டியதாயிற்று.''

**''அடுத்தாற்போல் நீந்திக் கடப்பதற்கு எந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள்?''**

''அதை இப்போது ரகசியமாகவே வைத்துக் கொள்ள விரும்புகிறேன். இந்தச் சமீப அனுபவத்தின் அலுப்பிலிருந்து விடுபெற இன்னும் நான்கு மாத காலத்துக்குமேலாகும். அதற்கப்புறம்தான் புது முயற்சிக்கான திட்டங்களை வகுக்க வேண்டும்!''

—மேனு



# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.6.21 TAM.

சார்லிக்கு ஒரே குஷி! தன் முன் பரப்பி வைக்கப்பட்டிருந்த நகைகளைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தான். நான்கு மணி நேரத்துக்கு முன்புதான் இரவோடு இரவாகச் சார்லி மிகவும் தந்திரமாக ஆனால் திறமையுடன் ஒரு நகைக் கடையைக் கொள்ளையடித்துவிட்டுத் தன் இருப்பிடத்துக்குத் திரும்பியிருந்தான். ஆனால் சார்லியின் மகிழ்ச்சி அதிக நேரம் நீடிக்கவில்லை. சிறிது நேரத்தில் எமகிங்கரர்கள் போல் இரு போலீஸ் அதிகாரிகள் நுழைந்தார்கள். சார்லி மீது பாய்ந்து அவனைக் கைது செய்தார்கள். நகைகளையும் கைப்பற்றிக் கொண்டு, ''நட, போலீஸ் ஸ்டேஷனுக்கு'' என்று சார்லியை அழைத்துச் சென்றார்கள்.

இவ்வளவு விரைவாகச் சார்லியை எப்படிப் போலீஸார் கைது செய்ய முடிந்தது? சார்லி தான் இக் குற்றத்தைப் புரிந்திருக்க முடியும் என்று எப்படிக் கண்டு பிடித்தார்கள்? போலீஸ் அதிகாரிகளுக்கு உதவி செய்தது ஓர் இயந்திரம்!



# கள்ளனைப் பிடிக்க ஒரு 'கம்ப்யூட்டர்'

மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த மூனிச் போலீஸ் துறையில் ''எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர்'' இயந்திரம் ஒன்று இருக்கிறது. துப்பறியும் வேலைக்கு இந்த இயந்திரம் பயன்படுத்தப் படுகிறது. கடந்த மூன்று ஆண்டுகளில் 'துப்பறியும் இயந்திரத்தின்' உதவியினால் நூறுக்கு மேற்பட்ட குற்றவாளிகள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

ஒரு முறை குற்றம் புரிந்தவர்களின் 'சரித்திரம்' அடங்கிய கார்டுகள் தயாரிக்கப்படுகின்றன. வயது, உயரம், பெயர், தொழில், முந்திய குற்றங்கள், விசேஷ பழக்க வழக்கங்கள், பொழுதுபோக்குகள் ஆகியவை இந்தக் கார்டுகளில் குறிக்கப்படுகின்றன.

சார்லிக்குப் புகையிலையைச் சதா மென்று கொண்டிருக்க வேண்டும். அன்று நகைக் கடையில் கொள்ளை அடிக்கப் போனபோதும், 'குஷியாகப் புகையிலையை மென்று கொண்டு தனது 'தொழிலில்' ஈடுபட்டிருந்தான். அப்போது அவனை அறியாமல் சிறிது புகையிலையைச் சிதறி விட்டான். குற்றம் நடந்த இடத்துக்குச் சென்ற போலீஸ் அதிகாரிகள், அதைக் கண்டனர். மூனிச் போலீஸ் அலுவலகத்தில் 40,000 கார்டுகள் இருக்கின்றன. துப்பறியும் இயந்திரம் ஒரு மணி நேரத்தில் 28,000 கார்டுகளைப் பார்வையிடும். இயந்திரம் இப்போது தன் வேலையைத் தொடங்கியது. கார்டுகளையெல்லாம் அலசிப் பார்த்தது. 'புகையிலை சுவைப்பவர்கள்' என்ற தலைப்பிலும், 'இரும்புப் பெட்டியை உடைப்பவர்கள்' என்ற தலைப்பிலும் இருந்த கார்டுகளுள் சார்லியின் கார்டை மட்டும் 'கம்ப்யூட்டர்' இயந்திரம் பொறுக்கி எடுத்தது. புகையிலை சுவைக்கும் பழக்கமுள்ள மற்றொரு குற்றவாளி ஏற்கனவே சிறையில் இருந்தான். எனவே சார்லியை எளிதில் போலீசார் பிடித்து விட்டனர்.

''துப்பறியும் இயந்திரம் மிகவும் நம்பகமானது; விரைவாகவும் சீராகவும் செயலாற்ற வல்லது'' என்று மூனிச் போலீஸ் தலைமை அதிகாரி இட்டல் பெருமிதம் கொள்கிறார். குறிப்பிட்ட முறைப்படி இயந்திரத்துக்குக் குற்றவாளிகளைப் பற்றிய தகவல்களை அவ்வப்போது அளிப்பதைப் பொறுத்து, அது விரைவாகக் குற்றவாளியைச் சுட்டிக்காட்டும். பெயர் அடிப்படையிலும், 'திருடும் முறை' அடிப்படையிலும் கார்டுகள் தயாரிக்கப்படுகின்றன. அத்துடன் குற்றம் நடந்த இடத்தில் எது எது எப்படி இருந்தது என்பதைச் சித்திரிக்கும் பதிவேடு ஒன்றையும் போலீசார் தயாரிக்கிறார்கள்.

துப்பறியும் வேலை இல்லாவிடில், 'துப்பறியும் இயந்திரம்' கடந்த மாதத்தில் நடந்த குற்றங்களை வரிசைப்படுத்திக் கொண்டிருக்கும்; அல்லது புதிய குற்றவாளிகளைப் பற்றிய விவரங்களைப் பதிவு செய்து கொண்டிருக்கும். -யூ.பி.ஐ.



## ஏழு பரிசுகளைப் பெற்ற படம்

வெறுப்பையும், அதிருப்தியையும் வெளிப்படுத்த நாம் உபயோகிக்கும் சொல்: 'பாலைவனம்'. மணல், மணல், மணல்—இதைத் தவிர பாலை நிலத்தில் என்ன இருக்க முடியும்? ஆனால் பாலைவனத்தையும் ரசிக்கும் படியாகப் பல்வேறு கோணங்களில் பலவித நிலைகளில் அதை அற்புதமாகப் படமாக்க முடியும் என்பதைத் தமது காமிராவின் திறமையால் நிரூபித்திருக்கிறார், எப். ஏ. எங் என்பவர். அதற்காக அவருக்கு அகாதமி பரிசும் கிடைத்திருக்கிறது. சரித்திரத்தில் நிகழ்ந்ததொரு சிறு சம்பவத்தை — அதில் கவர்ச்சிக்குப் 'பெண்' வாடையே இல்லாதபோதும்கூடச் சிறப்பாகச் சுவைபட டைரக்ட் செய்திருக்கிறார் டேவிட் லீன். ஆஸ்கார் பரிசும் பெற்றிருக்கிறார். பாலைவனக் காட்சிகளை ரம்மியமான வர்ணப் படங்களாக்க உதவியுள்ளார்கள், ஆர்ட் டைரக்டர்களான ஜான் பாக்ஸும், ஜான் ஸ்டோலும். அவர்களுக்கும் ஆஸ்கார் வழங்கப்பட்டிருக்கிறது. சம்பவங்களைக் கோவையாக்கி எடிட் செய்திருக்கும் திறமைக்கும், சங்கீதப் படமில்லாவிட்டாலும் கூட நல்ல இசை அமைப்புக்காகவும், ஒலிப்பதிவின் திறமைக்கும் கூட ஆஸ்கார் பெற்றிருக்கிறது ஒரு படம். இத்தனை சிறப்புக்களையும் கொண்ட அதை இவ்வாண்டின் சிறந்த படமென்று அறிவிக்காமல் இருப்பார்களா? இப்படி ஏழு அகாதமி பரிசுகளைப் பெற்றதுதான் லாரன்ஸ் ஆப் அரேபியா.

எந்தெந்தக் கலை நுணுக்கங்களுக்காக ஏ பரிசுகளைப் பெற்றதோ அந்தக் கலை நுணுக்க களையெல்லாம் உன்னிப்பாகத் தனித்தனி கவனித்து ரசிக்காமல் படத்தை மொத் மாக அனுபவிக்க நினைப்பவர்களுக்குப் பட தின் நீளம் காரணமாக அலுப்புத் தட்டி தூக்கம் வந்தால் ஆச்சரியமில்லை!

துருக்கியர்களை எதிர்த்து வெற்றி கொள் அராபியர்கள் கூட்டணி அமைத் போரிட்டபோது அவர்களுக்கு உற்சாக நம்பிக்கையும், புதிய சக்தியும் கொடுத் ஆச்சரியப்படத் தக்க வகையில் அராபி களை நடத்திச் சென்றார் ஓர் இளம் பி டிஷ் ராணுவ அதிகாரி. அராபியராக அவர்களது உடையில் இருந்து அவர்க ஒன்று சேர்த்துப் போரிட வைத்த லாரன் அராபியர்களின் சரித்திர புருஷராகிவிடுகி பிரதான பாத்திரமான லாரன்ஸாக பீட் ஓ' டூல் வருகிறார். படம் பார்ப்பவர்களை நெஞ்சிலே நிறைந்தும் விடுகிறார்.

130 டிகிரி அனல் பறக்கும் ஜோர்ட நாட்டு வெயிலில் சண்டைக் காட்சிகள் படமாக்கப்பட்டுள்ளன. (நல்ல வேளை! இப்ப ஓடும் ஸபயர் தியேட்டர் ஏர் கண்டிஷ செய்யப்பட்டுக் குளுகுளுவென்று இருக்கிற 5000 ஒட்டகங்களும் 500 குதிரைக இதில் நடித்திருக்கின்றன. ஆம். ஒட்ட களும் நடித்துத்தானிருக்கின்றன.

# எதிர் நீச்சல்

மண்ணெண்ணெய் வேண்டுமா? — மாது எங்கே? சோப்பு வேண்டுமா? — மாது எங்கே? ரிப்பன் வேண்டுமா? — மாது எங்கே? ரேஷன் கடைக்குப் போக வேண்டுமா? — மாது எங்கே? இப்படி எதற்கெடுத்தாலும் மாதுவைத் தேடுவானேன்? அவன் என்ன பெரிய மளிகைக் கடை வைத்திருக்கிறானா? — இல்லை. அவன் ஓர் அநாதை. ஆனால் அந்தப் பெரிய மாடி வீட்டில் குடியிருந்த அத்தனை பேர்களுக்கும் மாதுதான் கதி. போதாக் குறைக்கு இருமல் தாத்தா வேறு. அங்கிங்கெனாதபடி எங்கும் சுற்றிச் சுழன்று எல்லாருக்கும் உதவி புரிந்து கொண்டிருந்த மாது அந்தப் பெரிய வீட்டின் மாடிப் படிக்கு அடியில் ஒண்டிக் கொண்டிருந்தான். ஓயாமல் ஒழியாமல் மாதுவிடம் வேலை வாங்கிக் கொண்டிருந்த அந்த நன்றிகெட்ட சமூகம், அவன் மீது திருட்டுக் குற்றம் சுமத்தப்பட்டபோது அவனுக்குத் துளியும் ஆதரவு காட்டவில்லை. ஆனால் யார் எப்படிப் போனால் என்ன? அங்கு குடியிருந்த ரிடையர்டு ஸப் ரிஜிஸ்டிரார் சபாபதியும், மாடி ரூம் நாயரும் அவனிடம் பரிவும் பாசமும் கொண்டிருந்தனர். சபாபதியின் உதவியினால் தான் மாது காலேஜில் படிக்க முடிந்தது. அதற்குத்தான் எத்தனை எதிர்ப்புகள்! அத்தனை எதிர்ப்புக்களையும் சமாளித்து எதிர் நீச்சல் போட்ட மாது பி.எஸ்ஸி. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறியது அதிசயந்தான்.

இருமல் தாத்தாவுக்கு நோய முற்றி விடவே மாது அவரை ஆஸ்பத்திரியில் சேர்த்தான். அந்தத் தாத்தா தம் மூன்று லட்ச ரூபாய் ஆஸ்தியையும் மாதுவின் பெயருக்கு எழுதிவைத்து விட்டதாக மாடி ரூம் நாயர் சரடு விடுகிறான். அதை நம்பிவிட்ட அவ் வீட்டுக் குடித்தனக்காரர்கள் அத்தனை பேரும் மாதுவிடம் மட்டற்ற கரிசனம் காட்டிப் பரிசுகள் அளித்ததும், அது பொய் யென்று தெரிந்ததும் அத்தனை பரிசுப் பொருள்களையும் அவர்கள் பிடுங்கிக் கொண்டதும் மறக்க முடியாத காட்சிகளாகும்.




மாதுவாக நடித்த நாகேஷ் உருக்கமாகவும் நடித்துச் சிரிக்கவும் வைத்தார். பரீக்ஷை எழுதுவதற்கு முன்பு மிஸ்டர் சபாபதியிடம் விடைபெற்றுக் கொள்ளும் அழகு ஒன்று போதும். அப்புறம் பட்டு மாமிக்கும், கிட்டு மாமாவுக்கும் இடையில் அடிக்கடி ஏற்படும் சண்டையில் தலையிட்டு, மத்தியஸ்தம் செய்து வைக்கும் காட்சி, எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து கொண்டு திருட்டுக் குற்றம் சுமத்தித் துரத்தியபோது — மூட்டை கட்டியபடியே, 'மாது போய்விட்டால் தெரியும். அமாவாசையை ஞாபகப்படுத்துவது யார்? கடையில் மண்ணெண்ணெய் வந்திருக்கிறதா என்று பார்த்து வந்து பிறகு எல்லார் வீட்டுப் புட்டிகளையும் தூக்கிக்கொண்டு ஓடுவது யார்?' என்று ஆதங்கத்துடன் கேட்பது — ஆகியவைகளில் நாகேஷின் நடிப்பு பிரமாதம்.

மாடி ரூம் நாயராக நடித்த எஸ். ராமன் பிரமாதமாக நடித்தார். சரளமாக மலையாளம் பேசி யாவரையும் சிரிக்க வைத்து, மாதுவின் நேர்மையையும், நாணயத்தையும் பாராட்டி அவன் பங்கில் நின்ற நாயர் பாத்திரம் அருமையான படைப்பு. சபாபதியின் பாத்திரம் சுந்தரராஜனுக்குப் பொருந்துகிற மாதிரி வேறு யாருக்கும் பொருந்தாது. பெருந்தன்மை; மனித சுபாவம் எல்லாவற்றையும் அற்புதமாக வெளிப் படுத்துகிறார்.

பட்டு மாமியாக வரும் சௌகார் ஜானகி முக்கியமான பாத்திரமாக இல்லாவிட்டாலும் தம் சிறந்த நடிப்பினால் முக்கியத்துவம் பெற்று விடுகிறார். அவர் சினிமாச் சம்பவங்களை உதாரணம் காட்டிப் பேசும் லாகவம் எல்லாரையும் சிரிப்பில் ஆழ்த்துகிறது. பாருவாக வந்து, பைத்தியமாக நடித்துக் காரியப் பைத்



தியமாக மாறும் ஷோபாவும், ரேணுவாக வந்து ஒயிலாக நடக்கும் சிவகாமியும் நாடகத்தின் திருப்பங்களுக்குப் பேருதவியாயிருக்கின்றனர். அனுபவமுள்ள நடிகையான எஸ். என். லட்சுமி காவேரியாக நன்றாய் நடித்திருக்கிறார்.

இந்த நாடகத்தில் மொத்தம் எத்தனை நடிகர்கள் தெரியுமா? இருபத்து மூன்று! அந்த இருபத்து மூன்று பேர்களும் ஒரே வீட்டில் குடியிருப்பவர்கள்தான். இவர்களை வைத்துக் கொண்டு கே. பாலசந்தர் அருமையான நாடகம் ஆக்கித் தந்திருக்கிறார். வசனம், டைரக்ஷன் ஆகிய பெரும் பொறுப்புக்களையும் ஏற்றுக் கச்சிதமாக நிறைவேற்றியிருக்கிறார்; புது மாதிரியான பாத்திரங்களும் புது மாதிரியான கதையும் கொண்ட "எதிர் நீச்சல்" நாடகத்தை எதிர்கொண்டு வரவேற்கிறோம்.

# ஸிங்கர்*

## நம்பகத்தன்மை

## ஒவ்வொரு மெரிட்* மின்விசிறியிலும்

ஆயுட்கால ஸிங்கர் சேவையின் பக்கபலம் கொண்டது

...எந்தவகை மின்விசிறியும் சிறந்த குளுமையைத் தருகிறது

ஸிங்கர், விதவிதமான மெரிட் மின்விசிறிகளின் பல ரகங்களை அளிக்கிறது—எடுப்பான, ஒரு சீரான (ஸ்ட்ரீம்லைன்ட்) மாடல்கள், குறைவான, கண்ணுக் கினிய, வண்ணங்களில், வருடக்கணக்கான தொல்லையற்ற ஓட்டத்தைக் கொடுப்பதற்கேற்ற அமைப்புடன் தயாரிக்கப்பட்டவை.

உங்கள் அருகாமையிலிருக்கும் ஸிங்கர் கடையிலோ, அங்கீகாரம் பெற்ற ஸிங்கர் வியாபாரியிடமோ கிடைக்கும்.

**பெயரில் மெரிட், புகழில் ஸிங்கர்**






*ஸிங்கர் கம்பெனியின் ஒரு ட்ரேட் மார்க்.

SLG. 31 TAM

# வினா-விடை மணிமாலை

[ஏப்ரல் 25ந் தேதி ஸ்ரீ ஆதி சங்கரரின் ஜயந்தி நிகழுகிறது. இதனை யொட்டி அவர்கள் அருளிய 'ப்ரச்னோத்தர ரத்னமாலிகை'யிலிருந்து சில பகுதிகளை நேயர்களுக்கு அளிக்கிறோம்.]

வினா : குரு யார் ?

விடை: உண்மையை அறிந்தவர். தம்மை அண்டிய சிஷ்யர்களின் க்ஷேமத்துக்காக இடைவிடாது பாடுபடுபவர்.



வினா : சம்சாரக் கொடி எது?

விடை : ஆசை.

வினா : சத்துரு யார் ?

விடை: சோம்பேறித்தனம்.

வினா: துயரம் யாது ?

விடை : திருப்தியின்மை.

வினா: இழிவு யாது ?

விடை: இழிந்தோரிடம் யாசிப்பது.

வினா: உயர்ந்த ஜீவனம் யாது ?

விடை: குற்றமின்றி வாழ்வதே.

வினா : நரகம் யாது?

விடை : பிறர் வசமாயிருத்தல்.

வினா: சுகம் யாது?

விடை : அனைத்தையும் துறந்திருப்பது.

வினா: சாதிக்க வேண்டிய சாதனை யாது?

விடை: ஜீவராசிகளுக்கு நன்மை செய்தல்.

வினா: அனர்த்தம் தருவது எது ?

விடை: அகம்பாவம்.

வினா: சுகம் தருவது எது?

விடை: நல்ல மனம் உள்ளவர்களின் சங்கம்.

வினா: துயரங்களைத் தொலைப்பதில் எவன் சாமர்த்தியசாலி?

விடை: யாவற்றையும் தியாகம் செய்து விடுபவன்.

வினா: மரணம் எது?

விடை: மூர்க்கத்தனம்.

வினா: விலைமதிப்பற்றது எது?

விடை: காலத்திற் செய்த உதவி.

வினா: சாகும்வரையில் குத்துவது எது?

விடை: இரகசியத்தில் செய்த பாபம்.

வினா: பிரியமாகச் செய்ய வேண்டியது எது?

விடை: ஈனர்களிடத்தில் கருணையும், நல்லோரிடம் நட்பும்.

வினா: உலகத்தை எவன் வெல்லுவான்?

விடை: சத்தியமும் பொறுமையும் [உள்ளவன்.

வினா: தேவராலும் வணங்கப்படுபவன் யார்?

விடை: அருள் உடையவன்.

வினா: குருடன் யார்?

விடை: கற்றிருந்தும், கெட்ட காரியம் செய்பவன், நாஸ்திகன்.

வினா: செவிடன் யார்?

விடை: இதத்தைக் கேளாதவன்.

வினா: ஊமை யார்?

விடை: இனிய வார்த்தைகளை உரிய காலத்தில் கூற அறியாதவன்.

வினா: தானம் எது?

விடை: கேட்காது கொடுத்தல்.

வினா: நண்பன் யார்?

விடை: பாபம் புரியாமல் தடுப்பவன்.

வினா: அலங்காரம் எது?

விடை: சீலம்.

வினா: வாக்குக்கு அழகு எது?

விடை: சத்தியம்.

வினா: சிந்தாமணி போல் கிடைத்தற்கரியது யாது?

விடை: இனிய வாக்குடன் கூடிய கொடை, செருக்கின்மையுடன் கூடிய அறிவு, பொறுமையுடன் கூடிய வீரம், தியாகத்துடன் கூடிய செல்வம்.

வினா: இரவு பகல் விடாது சிந்திக்கத்தக்கது எது?

வினா: சம்சாரத்தில் சாரம் எது ?

விடை: 'சம்சாரத்தில் சாரமெது' என்பதை அடிக்கடி சிந்தித்துப் பார்த்துக்கொண்டே யிருப்பதுதான்.

வினா: மனிதர்கள் வேண்டவேண்டியது யாது ?

விடை: ஆத்ம க்ஷேமத்துக்காகவும், பிறரது க்ஷேமத்துக்காகவும் பாடுபடும் ஜன்மத்தை.

வினா : கள் போல் மயக்கம் உண்டுபண்ணுவது எது ?

விடை : பற்றுதல்.

வினா : திருடர்கள் யார் ?

விடை : இந்திரியங்களை இழுத்துப் போகும் விஷயங்கள்.

விடை: ஈசனது இணையடிகளே, சம்சார மல்ல.

வினு: சிறந்த தீர்த்தம் எது?

விடை: சித்தத்திலுள்ள அழுக்கை நீக்கு வது எதுவோ அது.

வினு: நற்புத்தியுள்ளவனுல் சொல்லத் தகாதது எது?

விடை: பொய்யும், பிறரது குற்றமும்.

வினு: விலக்க வேண்டிய சபை எது?

விடை: முதிர்ச்சி பெற்ற மந்திரிகளற்ற சபை.

வினு: எவ்விஷயத்தில் ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும்?

விடை: அரசாங்க சேவை செய்யும் விஷயத்தில்.

வினு: இரட்சிக்கத் தக்கது யாது?

விடை: கீர்த்தியும், சுய புத்தியும், கற்புள் ளவளும்.

வினு: உலகில் கற்பகக் கொடியா யிருப்பது எது?

விடை: நல்ல சீடனுக்கு அளிக்கப்பட்ட கல்வி.

வினு: எது சேனை?

விடை: தீரம்.

வினு: எது யமன்?

விடை: கவனமின்மை.

வினு: விஷம் இருப்பது எங்கே?

விடை: தீயோரிடம்.

வினு: தீட்டு எது?

விடை: கடன்தான். ('கடன் கொடுத்த வனுக்கு மனிதர் ஒளிவது போல் வேறெதற் கும் ஒளிவதில்லை. தீட்டில் கோவிலுக்குப் போகக் கூடாது; சபைக்குப் போகக் கூடாது. கடன் பட்டவனும் அப்படியே போக மாட் டான்' என்பது ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு அவர்கள் தரும் விளக்கம்.)

வினு: பயமற்ற நிலையை அடைவது எப்படி?

விடை: ஆசையை விடின் அதுவே அபயம்.

வினு: பயம் எது?

விடை: பணம்தான்.

வினு: பகவானுக்கு யாரிடத்தில் மிகுந்த பிரியம்?

விடை: தன் மனத்தையும் கஷ்டப்படுத்திக் கொள்ளாமல், பிறருக்கும் கஷ்டம் நினையாத வனிடத்தில்.

வினு: உண்மையான புத்தி எது?

விடை: பெரியோரை அடுத்து சுச்ருஷை செய்து பெறும் புத்தி.

வினு: பெரியோர் யார்?

விடை: (வயதில் சிறியோரா யிருப்பினும்) தரும தத்துவம் அறிந்தவரே பெரியோர்.

வினு: மரணத்தைக் காட்டிலும் பெரிது எது?

விடை: அபகீர்த்தி.

வினு: தெய்வம் என்பது என்ன?

விடை: நாம் செய்த நல்ல காரியமே.

வினு: துக்கமற்றவன் யார்?

விடை: கோபமற்றவன்.

வினு: இன்பம் எது?

விடை: திருப்தி.

வினு: இந்திர ஜாலம் எது?

விடை: பிரபஞ்சமே.

வினு: உண்மை எது?

விடை: பரம்பொருள்.

வினு: பரதேவதை யார்?

விடை: ஞானரூபியான அம்பிகை.

வினு: பகவான் யார்?

விடை: சிவனும் விஷ்ணுவுமான ஒரே மூர்த்தி.

வினு: கண்ணுக்குத் தெரியும் கடவுள் யார்?

விடை: தாயார்.

---



# ஒரே பேச்சு – பல ஊர்களில்

**கா**லஞ்சென்ற தமிழறிஞர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் மாயூரத்தில் ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருக்கிறார்கள். பேச்சு முடிந்ததும் அவருடைய நண்பரொருவர் ''இந்தப் பேச்சு பதினைந்து நாட்களுக்கு முன்னால் கரூரிலே சொன்ன விஷயம்தானே?'' என்று கேட்டார். அதற்குத் தொண்டைமான் ''சரிதான் ஐயா, கரூர்க்காரர்கள் இங்கே வரவில்லையே. நூறு நாட்கள் ஓடுகிற படத்துக்குத்தானே மவுசு. இசைத்தட்டுக்கள் தேய்ந்து தோசைக் கல்லான பிறகும் சுழல்கின்றனவே. சர்க்கஸ்காரன் புதிதாக ஒன்றும் செய்வதில்லையே, கையைக் காலை ஒடித்துக் கொள்வதைத் தவிர. சிவலிங்கங்களை அன்றிருந்த மேனியே ஆகம விதிப்படி மேலும் பிரதிஷ்டை செய்கிறார்கள். வைர விழாக் கொண்டாடுகிற பாடகருக்கு ஐம்பது ராகங்கள்தான் வரும். நூறு உருப்படிகள்தான் பாடம். வைரமும் பொன்னுடையும் மட்டும்தான் புதியன; கடையில் வாங்கினதால். எத்தனை தரம் சொன்னாலும் தீராதே – அழகின் சுவிசேஷம், அனுபூதி. அதைத்தானே சொல்கிறேன் நான் திரும்பத் திரும்ப'' என்று திரும்ப மடக்கினார் நண்பரை.

(ஆதாரம்: **தொண்டைமான் மணிவிழா மலர்**) - **ரா. ஜகத்ரக்ஷகன்**

# லைப்பாய்

இருக்குமிடம்: அதுவே...
ஆரோக்கியம் இருக்குமிடம்




லைப்பாய் சோப்பினால் நீராடுவீர்... அதுவே குதூகல உணர்ச்சியின் குற்றாலம்... ஆரோக்கிய மலர்ச்சியின் ஆலோலம்...ஆஹாஹா...நல்ல சோப்பின் நன்மைகள் யாவும் பெறுவீர், மேலும் பெறுவீர் லைப்பாய் துணையால்...

**அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

லின்டாஸ்-L.59-140 TI





1. சென்னை மாநில ஆரம்ப ஆசிரியர்களின் விருது வழங்கும் விழாவில் திருவல்லிக்கேணி எஸ். எஸ். ராகவேந்திர ராவ் தொடக்கப் பள்ளி ஆசிரியர் ஸ்ரீ பி. எஸ். நாகராஜ ராவ் சென்னை கவர்னர் ஸ்ரீ சந்திரா ரெட்டி அவர்களிடம் விருது பெறுகிறார்.



2. அமெரிக்காவுக்கு விஜயம் செய்த பாரதப் பிரதமர் இந்திரா காந்தி அமெரிக்க ஜனாதிபதி ஜான்சனோடு காட்சி அளிக்கிறார்.

3. கருங்குழிக்கு அருகிலுள்ள ஸ்ரீ முனுசாமி முதலியாரின் தேசியப் பண்ணைக்கு முதன் மந்திரி ஸ்ரீபக்தவத்சலமும், உள்நாட்டு மந்திரி ஸ்ரீ கக்கனும் விஜயம் செய்து பார்வையிட்டனர்.

4. திறம் மிக்க செயலாற்றிப் புது தில்லியில் கொள்ளைக்காரர்களைப் பிடித்த நான்கு மாணவர்களுடன் கல்வி மந்திரி சாக்ளா. ஒவ்வொருவருக்கும் நூறுரூபாய் நன்கொடை வழங்கிப் பாராட்டினார்.





## கண்ணிழந்தாலென்ன ?

கி. பி. 1864. லண்டனுக்கு வந்து சேர்ந்த அந்த ஹங்கேரிய இளைஞனுக்கு வயது பதினேழு. பிரிட்டிஷ் ராணுவத்தில் சேர முயன்றான். ஆனால், அதற்கேற்ற உடற்கட்டுமில்லை; கண் பார்வையும் சரியில்லை. அமெரிக்க உள்நாட்டுப் போரில் ஈடுபட்டிருந்த யூனியன் படைகளுக்கு ஆள் திரட்டிய ஏஜன்டின் கடாட்சம் அந்த இளைஞன்மீது விழுந்தது.

அமெரிக்காவில் சிறிது காலம் ராணுவ சேவையில் ஈடுபட்டிருந்து, பின்னர் செயின்ட் லூயி போய்ச் சேர்ந்த அந்த வாலிபன் பிழைப்புக்காகப் பல சாமான்யமான தொழில்களைப் புரிய நேர்ந்தது. மூன்றாண்டுகளுக்குப் பிறகு ஒரு ஜெர்மானிய மொழிப் பத்திரிகையில் ரிப்போர்ட்டராகப் பணியாற்றும் வாய்ப்பினைப் பெற்றான். தம் இருபத்துநான்காம் வயதில் அந்தப் பத்திரிகையின் முதலாளிகளுள் ஒருவராகிவிட்டார்! மூழ்கும் தறுவாயிலிருந்த வேறொரு பத்திரிகையை ஒரு சிறு தொகை கொடுத்து விலைக்கு வாங்கினார். இந்தப் பேரங்களில் அவருக்குக் கிடைத்த நிகர லாபம் ஏழாயிரம் பவுன்! இதுதான் மூலதனம். இதன் பிறகு அவர் தொட்டதெல்லாம் பொன் ஆயிற்று. ஆங்கில மொழி, சட்டம், அரசியல் இவைகளில் வல்லுநர் ஆனார். தள்ளாடிக் கொண்டிருந்த இரு ஆங்கில நாளிதழ்களை விலைக்கு வாங்கி அவைகளை ஒன்றாக இணைத்து செயின்ட் லூயி போஸ்ட் டிஸ்பாட்ச் என்ற சக்தி



வாய்ந்த பத்திரிகையை உருவாக்கினார். நாளடைவில், தம் நியூயார்க் வேர்ல்ட் என்ற பத்திரிகையின் மூலம் அமெரிக்கப் பொதுஜன அபிப்பிராயத்தையே உருவாக்கும் அளவுக்குச் செல்வாக்குப் பெற்றார். நாற்பது வயது நிரம்புவதற்குள் அமெரிக்காவின் மிகப் பெரிய கோடீசுவரரானார். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, அவர் அப்போது கண் பார்வையை முற்றும் இழந்தார். பார்வையிழந்தாரெனினும் சிறந்த அறிவாளிகள் பலரைத் தம் கண்களாக ஆக்கிக் கொண்டு, அவர்களின் முழுத் திறமையையும் பயன்படுத்திக்கொண்டார். யார் இந்த மேதை? இலக்கியம், பத்திரிகைத் தொழில், நாடகம் முதலிய துறைகளில் புலமை மிக்கவர்களுக்கு அமெரிக்காவில் தரப்படும் புலிட்சர் பரிசு, இந்த மேதை ஜோசப் புலிட்சரின் நினைவாகத்தான் வழங்கப் பெறுகிறது.

- பாணன்

புதுவகை மூக்குக் கண்ணாடியை 'என். ஒய். கார்னிங்' கம்பெனி கண்டு பிடித்திருக்கிறது. இது அறையிலிருந்தால் சாதாரணக் கண்ணாடி போல் தோன்றினாலும் வெளிச்சத்தில் நிற மாற்றம் ஏற்பட்டுக் குளிர்ச்சிக் கண்ணாடி போல் ஆகிவிடுகிறதாம். அறையில் 90% ஊடுருவிய ஒளி வெளிச்சத்துக்கு வந்ததும் ஒரு நிமிஷத்தில் 78%க்குக் குறைந்து விடுகிறது. ஒரு மணியில் ஒளி ஊடுருவல் 66% ஆகிவிடுகிறது. கண்ணுக்கு ஒளி குன்றச் செய்யும் நிறத்தில் இருந்து மீண்டும் பாதி அளவு நிறமின்றி ஆக ஐந்து நிமிடங்களும், $\frac{3}{4}$ பகுதி நிறம் மறைய 20 நிமிடங்களும் ஆகின்றனவாம். ஒளியில் கண்ணாடி மங்கிய நிறத்துடன் தோன்றினாலும் பொருள்களின் உண்மையான நிறம் கண்களுக்கு நன்கு புலனாகின்றன. சூரிய ஒளியில்தான் இது அதிகமாகக் குளிர்ச்சிக் கண்ணாடி ஆகிறது.

'லயன்ஸ் டைஜஸ்ட்' - 'நட்பு'

## உலகத்திலேயே சிறிய ஊர்!

ஒன்டேரியாவில் ஒஜிப்வே என்று ஓர் ஊர். கனேடியன் ஸ்டீல் கார்ப்பரேஷனாரால் 1937-ம் ஆண்டு இந்த ஊர் ஏற்படுத்தப் பட்டது. கடைசியாக, 1956ம் ஆண்டு எடுத்த ஜனத்தொகைக் கணக்குப்படி இந்த ஊரின் ஜனத் தொகை பூஜ்யம். இந்த ஊரில் எஞ்சியிருந்த தம்பதிகள் இரு குழந்தைகளோடு வெளியேறிவிட்டார்கள் அண்மையில்தான். என்றாலும் ஊரின் பெயர் மட்டும் இன்னும் பட்டியலில் இருந்து கொண்டிருக்கிறது.

- காழி வ. மாணிக்கம்

## கைவிட்ட காரணம் !

பழைய நண்பர்களான மோகனும், கோபாலும் எதிர்பாராத விதமாக ஒரு பார்க்கில் சந்தித்தனர். உற்சாகமாகத் தங்கள் கல்லூரி நாட்களைப் பற்றிய சம்பாஷணையில் இறங்கினர்.

"ஏன்டா கோபு, கடைசியில் நீ அவளைத் திருமணம் செய்து கொள்ளவில்லையாமே?" என்றான் மோகன்.

"யாரைடா, சொல்கிறே, நீ?"

"யாரையா! அதுக்குள்ளே அவளை மறந்துட்டியா? உன் அருமைக் காதலி சகு! பி.யூ.சி.யில் படித்தாளே சகுந்தலா, அவள்தான்."

"ஓ. அந்தக் கதையைச் சொல்றியா?"

"அவளால்தானே நீ சிகரெட் குடிக்கும் பழக்கத்தைவிட்டாய்?"

"ஆமாம்."



"அவளுக்காகத்தானே நீ சீட்டாடுவது, சினிமா பார்ப்பது ஆகிய பழக்கங்களை விட்டாய்?"

"ஆமாம், உண்மைதான்."

"அப்படி இருக்கும்போது நீ அவளை எப்படிக் கைவிட்டாய்?"

"நான் இவ்வளவு தூரம் திருந்திய பிறகு, பெற்றோர்களின் சம்மதமில்லாமல் காதல் கல்யாணத்தில் இறங்குவது பிசகு என்று தோன்றியது. அதனால்தான்."

— சந்துரு

"கல்யாணம் ஆகி இன்றைக்குத்தான் என் மனைவி முதல்லே சமைக்கப் போகிறாள். அதனால் நீ அவசியம் வரணும்!"

"கஷ்டத்திலேயும் பங்கு கொள்கிறவன் தான் உண்மை சிநேகிதன். அதனாலே அவசியம் வரேன்!"



## சாவதற்கு அஞ்சிய சர் சி. வி. ராமன்!

ஆச்சரியமாய் இருக்கிறதல்லவா? ஆமாம். நோபல் பரிசு பெற்ற விஞ்ஞான மேதை சர் சி. வி. ராமன்தான் சாவதற்கு அஞ்சினார்.

பூனாவில் நடந்த மகாநாடு ஒன்றில் கலந்து கொள்வதற்காக விஞ்ஞான மேதை சர் சி. வி. ராமன் சென்றிருந்தார்.

மாநாட்டில் பேசிய மத்திய அரசாங்க அமைச்சர் ஒருவர், 'இந்த நாட்டில் இனிமேல் எவரையும் பட்டினியாலோ, பசியாலோ இறக்கவிட மாட்டோம்' என்று முழங்கினார்.

அடுத்துப் பேசிய டாக்டர் ஒருவர், 'இனிமேல் நாங்கள் நோயாலோ, நொடியாலோ எவரையும் இறக்கவிட மாட்டோம்' என்று மார்தட்டிக் கர்ஜித்தார்.

அவருக்குப் பின் பேச வேண்டியவர் சர் சி. வி. ராமன். அமைதியாக எழுந்தார், எல்லாருடைய பார்வையும் அவர் பக்கமே திரும்பியது. 'அமைச்சர் அவர்கள் எவரையும் இனிமேல் பசியாலோ, பட்டினியாலோ இறக்கவிட மாட்டோம் என்றார். டாக்டர் அவர்களும் இனிமேல் எவரையும் நோயால் இறக்கவிட மாட்டோம் என்றார். இவர்கள் இருவரும் பேசியதைக் கேட்டபின் எனக்கு ஓர் அச்சமே ஏற்பட்டு விட்டது' என்று சொல்லிவிட்டு நிறுத்தினார் சி. வி. ராமன்.



அதற்குள் அங்கிருந்தோர் அனைவர் உள்ளத்திலும், அப்படி என்ன அச்சம் இந்த விஞ்ஞான மேதைக்கு ஏற்பட்டு விட்டது என்ற ஐயம் எழுந்தது. என்ன கூறப் போகிறார் என்று ஆவலுடன் பார்த்தனர்.

புன்முறுவலுக்கிடையே சர் சி. வி. ராமன், 'எனக்கு ஏற்பட்ட அச்சம், இவர்கள் இப்படிச் செய்து விட்டார்கள் என்றால் நாம் எப்படிச் சாவது என்பதுதான்!' என்றார்.

தகவல்: பட்டுக்கோட்டை கலைக்கோவன்.

ஆதாரம்: அப்துல் ரஹீம் எழுதிய 'படியுங்கள் சிரியுங்கள்!' என்ற நூல்.

## எவர்சில்வர் சட்டைகள்!

ஸ்வீடனிலுள்ள ஸான்ட்விகன் ஸ்தாபனத்தார் செய்த ஒரு வேலை பழைய துணிகளுக்கு எவர்ஸில்வர் பாத்திரம் தருவோர் பிழைப்பில் மண்ணைப் போட்டு விடும் போலிருக்கிறது! இந்த ஸ்தாபனம் எவர் ஸில்வரிலிருந்து 0·007 மில்லி மீட்டர் விட்டமுடைய மெல்லிய நூல் இழைகளைத் தயாரித்திருக்கிறது. இந்த இழைகளிலிருந்து காலுறைகள், படுக்கை விரிப்புகள், ஜமக்காளம், சட்டைகள் முதலியன தயாரிக்கலாம். இவை கலபத்தில் கிழியாது; நைந்து போகவும் செய்யாது! இந்த எவர்ஸில்வர் சட்டைகளும் துணிகளும் வந்துவிட்டால் பழைய துணிகளுக்குப் பாத்திரங்கள் தருபவர்களை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்!

ஆதாரம்: "தி காமர்ஸ்", பம்பாய்.

தகவல்: எஸ். ஆர். கிருஷ்ணன், சிந்திரி.



நகை அடகு பிடிக்கும் கடை ஒன்றின் விளம்பரம்:

"உங்கள் அசௌகரியப்படி எப்போது வேண்டுமானாலும் வந்து சந்திக்கலாம்."

ஆதாரம்: தர்மயுக் —'பரதேசி'



ரவீந்திரநாத தாகூரின் எண்பதாவது பிறந்த தினத்தின் போது மகாத்மா காந்தி பின்வருமாறு தந்தியொன்றைத் தாகூருக்கு அனுப்பினார்:

'எண்பது வயது போதாது. நூறு வயது வாழ்வீர்களாக. அன்பு.'

மகாத்மாவுக்குக் கவியரசர் அனுப்பிய பதில்:

'தங்கள் வாழ்த்துச் செய்தி வந்தது. எண்பது வயது வாழ்ந்ததே அதிகப்பிரசங்கித்தனம். நூறு வயது தாங்க முடியாது.'

— விஜித்ரா




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி. அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர். 10031, பம்பாய்.




**COUPON** K.6

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ..............................................

*Address* ..............................................

..............................................

# 11




வீட்டை விட்டுப் புறப்பட்ட நாணு நேரே ரயிலடிக்கு வந்தான். அவனுக்கென்றே அந்த நேரத்தில் ஒரு வண்டி புறப்படத் தயாராக இருந்தது. சாதாரணமாக வேனூரில் அந்த வண்டி நிற்பதில்லையாம். அன்று நின்றது. அதற்கு ஏதோ காரணம் சொன்னார்கள். நாணுவைப் பொறுத்தவரை அந்த வண்டி அவனை ஏற்றிக் கொண்டு போவதற்காகவே நின்றதாகத்தான் தோன்றிற்று. அந்த வண்டி பல சிறிய பெரிய ஊர்களில் நிற்காமல், அவனைச் சுமந்து கொண்டு ஓடிற்று.

அப்படி ஓடிய வண்டி பல மணி நேரங்களுக்குப் பின் கடைசியாக ஓர் ஊரில் வந்து நின்றது. அதற்குமேல் போகாது என்றார்கள். நாணு இறங்கினான். பசியும் அவனோடு இறங்கிற்று. கவலையும் இறங்கிற்று. இவை தவிர தன்னுடன் அவன் கொண்டு வந்தவை எவையுமில்லை. மாற்றுடைகூட எடுத்து வரவில்லை.

ஜனக்கூட்டத்தில் நீந்தி அவன் வெளியே வந்து விட்டான். ரயில் நிலையத்திற்கு வெளியே டிக்கட் பரிசோதகர் அவனை மிரட்டி எச்சரித்து 'போய்த் தொலை' என்று கூறி, விட்டு விட்டார்.

வந்திருக்கும் நகரம் கோவை என்பது தெரிந்தது. ரயில் நிலையத்துக்கு வெளியே ஐம்பது பேர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் ஏதோ ஒரு கொடியைக் கைகளில் ஏந்தியிருந்தார்கள். நாணு வேடிக்கை பார்த்துக் கொண்டு சற்று நேரம் நின்றான்.

திடீரென்று உரத்த குரலில், "பணிக்கருக்கு ஜே!" என்ற கோஷம் கேட்டது. 'தொழிலாளர் இயக்கம்" என்ற முன் குரலும், "வாழ்க!" என்ற பின் குரலும் ஒலித்தன. பணிக்கர் கைகூப்பினார். ரயிலில் தன்னுடன் பிரயாணம் செய்த ஜிப்பாக்காரர்தான் அவர் என்று தெரிந்ததும் நாணுவுக்கு வியப்பாக இருந்தது. அவனுக்கும் இப்படி ஒரு கும்பல் வந்து, 'ஜே!' போட்டால் எவ்வளவு பெருமையாக இருக்கும்

ரயில் நிலையத்தை ஒட்டிய தெருவின் வளைவில் இப்போது ஊர்வலமாக ஒரு பெரும் அணிவகுப்பு வந்தது. அத்துடன் இந்த ஐம்பதும் சேர்ந்தது. நாணுவின் கையிலும் ஒரு கொடியைக் கொடுத்து, 'ஏன், நிற்கிறீங்க?.... ஊர்வலத்திலே சேருங்க" என்றார் ஐம்பதில் ஒருவர்.

நாணு சேர்ந்து விட்டான். அந்த ஊர்வலம் எங்கே போகிறது, ஏன் போகிறது என்பதொன்றும் அவனுக்குத் தெரியாது. 'ஜே!' 'வாழ்க!', 'ஒழிக!' என்ற மந்திரச் சொற்களைக் கும்பலோடு சேர்ந்து கொண்டு அவனும் கோஷித்தான். 'மமதை பிடித்த நிர்வாகமே, ஆறு மாத போனஸ் கொடு !' என்று கூட்டம் குரல் எழுப்பிற்று. நாணுவுக்கு இந்தப் பிரார்த்தனையில் ஆட்சேபமில்லையாதலால் அவனும் 'அவ்வாறே ஆகுக!' என்று சத்தமிட்டான்.

வழிநெடுகச் சிவப்புத் தொப்பிகள் நின்றன. சாலை ஓரங்களில் எல்லாம் ஜனக் கும்பல் நின்றது. அவர்களுக்கு இந்த ஊர்வலம் வேடிக்கையாக இருந்தது. எந்தப் பிரச்னையும் அவரவர்க்கு வரும்போதுதான் உறைக்கும் போலிருக்கிறது. இத்தனை தொழிலாளிகள் 'ஸ்டிரைக்' செய்து போராடுவதில் நியாயம் இருப்பதை அவர்கள் உணராமல் வேடிக்கை பார்க்கிறார்களே என்று வருத்தமாக இருந்தது நாணுவுக்கு.

ஒரு மகஜரை எடுத்துக் கொண்டு பணிக்கர் தொழிற்சாலைக்குள் சென்றார். பத்து நிமிடங்களில் திரும்பி வந்தார். அங்கேயே ஒரு கூட்டம் நடந்தது. அவர் பேசினார்:

"தொழிலாளத் தோழர்களே, நம் போராட்டம் தொடர்ந்து நடந்தே தீர வேண்டியிருக்கிறது. மமதை பிடித்த முதலாளி வர்க்கம் நம் கோரிக்கைகளுக்கு இணங்க மறுத்து விட்டது. நான்கு மாத போனஸ்தான் தர முடியுமாம்..... இதை ஏற்பதைவிட உண்ணாவிரதம் இருந்து உரிமையை நாடுவோம்!"

கூட்டம் அவர் வாயையே பார்த்தது.

நாணுவின் உடலிலும் உள்ளத்திலும் முறுக்கு ஏறுவது போலிருந்தது. பணிக்கரின் பேச்சு வீரத்தை மட்டுமல்ல, பொருளாதார நுணுக்கங்களையும் அவனுக்குப் போதித்தது. லாபத்தை மூட்டையாகச் சுருட்டும் ஒரு வர்க்கம் மாடி வீட்டில், மோட்டார் வாகனத்தில், மயக்கும் போதையில், ரத்தவெறியில் வாழ்கிற உண்மையையும், உழைக்கும் வர்க்கம் குச்சு வீட்டில், குமையும் வறுமையில், கண்ணும் காதும் மயங்க, உயிர் இழக்கும் உண்மையையும் அவருடைய பேச்சு அவனுக்கு எடுத்துக் காட்டிற்று.

"வேலைநிறுத்தம் தொடர்ந்து நடைபெறும்" என்று தீர்மானம் நிறைவேற்றப்

பட்டபோது நாணுவும் கை வலிக்கக் கரகோஷம் செய்தான். கூடிக் கூடிப் பேசியவாறே கூட்டம் கலைந்தது.

நாணுவும் புறப்பட்டான். பசி வயிற்றைக் கிள்ளிற்று. அவனுக்கு யார் போனஸ் தருவார்கள்? உண்ணாவிரதம் மேற்கொள்ளும் அவசியம் அவனுக்கு வலிய ஏற்பட்டிருந்தது. உடல் இளைத்தது. இரக்கப்பட்டு ஒரு வேளைச் சாப்பாடு போட்டார்கள் ஒரு கல்யாண வீட்டில். அதன் பிறகு யாரிடமும் அவன் கை ஏந்தவில்லை. மூன்றாம் நாள் அவன் மீண்டும் அந்தத் தொழிற்சாலை வாசலுக்கே வந்தான். பணிக்கர் இருந்தார். அவனைக் கண்டதும், ''நீ என்ன விஜயலட்சுமியா?'' என்று கேட்டார்.

''இல்லே... நான் நாராயணன்'' என்றான் அவன்.

அவர் வியப்புடன் அவனைப் பார்த்துவிட்டு, ''எந்தா நாராயணன்?... இவ்விட அப்படியொரு மில் உண்டோ?'' என்று கேட்டார்.

அருகில் இருந்தவர்கள் 'இல்லே' என்றார்கள்.

''ஓ...நிம்பட பேரோ அது?... ஞான் நீங்கள் விஜயலட்சுமி மில்ஸ் தொழிலாளராக்கும்னு சம்சயிச்சு...'' என்றார் பணிக்கர்.

பணிக்கர் மேடையில் கூடிய வரை கலப்படமில்லாத தமிழில் தான் பேசினார். அது ஓரளவுக்கு அவருக்குச் சிரமமாகக்கூட இருந்திருக்க வேண்டும். மேடையை விட்டு இறங்கியதும் மலையாளம் தாராளமாகவே கலந்தது பேச்சில். நாணுவுக்கு அவருடைய அந்தப் பேச்சை கூடப் பக்திக் குரியதாகத் தோன்றியது.



"நான் வேலையில்லாதவன்" என்றான் நாணு.

"ஓ... எந்தக் கிளாஸ்வரை படிச்சிருக்கு?"

"ஸ்கூல் பைனல் முடிச்சுட்டேன்."

"இங்கே எவ்விட ஜாகை?"

"நான் ஊருக்கே புதுசு... எனக்கு யாரும் இல்லை..."

"அதா சமாசாரம்?... நீங்கள் இவ்விட நம்ப சங்கந்தன்னில் இருக்கலாமே. சம்பளம் தரதுக்கு ருப்யா இல்லா... சாப்பாடு கிட்டும்; மதியோ...?"

"மதி."

நாணு அந்தப் பஞ்சாலைத் தொழிலாளர் கட்டடத்தில் பணிக்கரின் கீழ் இன்ன வேலைதான் என்று குறிப்பிட்டு இல்லாமல் எல்லா வேலைகளையும் கவனித்து வருகிற சீடனாகத் தங்கி விட்டான். அவன் மனத்துக்கு அந்த வேலை உவப்பாக இருந்தது. ஏனெனில் அது வேலையல்லவே! பொது மக்களின் சேவை — தொழிலாள வர்க்கத்தினருக்குச் சேவை!

வேலூரை விட்டுப் புறப்படும்போது இப்படி ஒரு திருப்பம் வரும் என்று அவன் கண்டானா? அருவருப்பும் ஆங்காரமும் கலந்த நெஞ்சோடு ஓடி வந்தவனுக்கு இங்கே மனத்துக்கு உவப்பான ஒரு தொழில் கிடைத்து விட்டது!

தொழிலாளர்களிடையே ஒரு சிறப்பான குணத்தை அவன் கண்டான். தலைவனின் முடிவை ஆராய்ந்து கொண்டு குற்றம் குறை சொல்லிக் கொண்டிருக்கிற படித்த வர்க்கத்தினர் இல்லை இவர்கள். ஒரு முடிவு எடுத்தால் இறுதிவரை அதிலே அவர்கள் தயங்கமாட்டார்கள். அவர்களைப் பொறுத்த வரை பணிக்கர் தெய்வமாக இருந்தார். பணிக்கரைப்பற்றியும் ஒரு சிறப்பைச் சொல்ல வேண்டும். அவர் ஆடம்பரமாக வாழவில்லை. திருமணம் ஆகாதவர் அவர்.

வேலைநிறுத்தம் தொடர்ந்து நடந்து வந்தது. தினமும் தொழிற்சாலை வாயிலில் கருங்காலிக் கும்பலை மறிக்கும் சங்க உறுப்பினர்கள் கோஷம் எழுப்புவார்கள். போலீஸ் நிற்கும். பணிக்கர் முன் நிற்பார். தொழிற்சாலை நிர்வாகி பிடிவாதமாக ஆலையைத் திறந்து வைத்துக் கொண்டிருந்தாரே தவிர, வேலை சீராக நடைபெறவில்லை. இந்த நிலை நீடிக்குமானால் தொழிலாளர்களின் குடும்பங்கள் தவித்துப் போகுமென்பதைப் பணிக்கர் அறிவார். அதை நாணுவிடம் சொல்லவும் சொன்னார்.

"அதற்காக இலட்சியத்திலிருந்து நழுவ முடியுமா?" என்றான் நாணு.

"இலட்சியத்திலிருந்தும் நழுவாமல், இந்தத் தொழிலாளர் கஷ்டமும் நீடிக்காமல் ஒரு வழி கண்டுபிடித்தாக வேண்டும், நாராயண்...முதலாளி ராஜி பேச



விரும்புகிறாராம்... ஆள் வந்து சொன்னான். போய் வருவோமா?'' என்றார் பணிக்கர்.

''நீங்கள் விரும்பினால் வருகிறேன்!'' என்றான் நாணு.

பணிக்கர் பணிந்து போகிற ரீதியில் இந்த அழைப்பை ஏற்கவில்லை. அது நாணுவுக்குத் தெரியும். அவர் பிரத்தியட்ச நிலைகளை நன்கு அறிந்திருந்த தொழிற்சங்கவாதி. இங்கு வந்த பிறகு இன்னும் பல தலைவர்களை நாணு பார்க்க நேர்ந்தது. ஆனால் அவர்களிடமெல்லாம் பணிக்கரிடமிருந்த நேர்மையும், சுத்தமும் இல்லை. போட்டா போட்டிச் சங்கங்களாகவும் தொழிற் சங்க வளர்ச்சியை விடத் தங்கள் வளர்ச்சியே நோக்கமாகவும் அவர்கள் இயங்கினார்கள்.

முதலாளியை நாணுவும், பணிக்கரும் சந்தித்தார்கள்.

ஆஜானுபாகுவான தோற்றமும் இனிய குரலும் படைத்திருந்தார் முதலாளி. உடலில் தங்கத்தின் மினுமினுப்புத்தெரிந்தது.

''வாருங்கள்'' என்று வரவேற்றார் அவர்களை.

குளிர் அறைக்குள் பத்தடி நீள அகல மேசைக்குப் பின்னாலே அமர்ந்திருந்த அவரைப் பார்த்தபோது நாணுவுக்கு ஏனோ முன்பு பத்தடிக்குப் பத்தடி அறைக்குள் வாழ்ந்த நாட்கள் நினைவுக்கு வந்தன. மதுரையில் அம்மாவுடனும், வேலூரில் அத்தானின் நிழலிலும் அவனுக்கு நாலு சதுர அடிப் பரப்பே வாய்த்தன. இப்போது அவனுடைய ஆட்சி பரவலாகி விட்டதென்றாலும் அந்தப் பழமைக்குள் முளைத்த செடிதானே இது! அரும்பு விடத் தொடங்கியிருக்கும் பருவத்தில் அவன் இருக்கிறான். இன்னும் பூக்கவில்லையே!

''நம்பட அஸிஸ்டெண்ட் நாராயண்...'' என்று அறிமுகம் செய்வித்தார் பணிக்கர்.

''வாப்பா, நாராயண், உன்னைப் போல் இளைஞர்கள் தொழிலாளர் நலனுக்காகப் பாடுபட முன்வருவது பற்றி எனக்குச் சந்தோஷம்... உட்கார்...'' என்றார் முதலாளி.

அவருடைய குரலில் இருந்த இனிமையை விடப் பண்பட்ட உள்ளப் பாங்கு அவனுக்கு உவப்பாக இருந்தது. மமதையும் கண்டிப்பும் மிகுந்தவராக அவரை அவன் கற்பனை செய்திருந்தான். அவரோ எந்தப் பிரச்னையையும் நியாய பூர்வமாக அணுகத் தயாராக இருந்தார்.

ஐந்து மாத போனஸ் தருவதாக விசுவநாதன் ஏற்றுக் கொண்டு, தொழிலாளர்களுக்குக் குடியிருப்பு மனைகள் கட்டும் திட்டத்தையும் விவரித்து மனம் விட்டுச் சொன்னார். ''என் கீழ் வேலை செய்கிறவர்கள் நன்றாக வாழ வேண்டும் என்பதில் எனக்கு அக்கறை இல்லையா?... பார்க்கப் போனால் எனக்கு ஆண் சந்ததி கிடையாதென்பது உங்களுக்குத் தெரியுமல்லவா? இந்த ஆலையைத் தொழிலாளர்களுக்கே வழங்குவதாகக் கூட ஒரு திட்டம் என் மனதில் இருக்கிறது'' என்றார் அவர்.

நாணுவின் உள்ளம் பூரித்தது.

பணிக்கர் கரம் கூப்பி அந்த நல்ல உள்ளத்துக்கு வணக்கம் தெரிவித்தார்.

நெடுநேரம் வரை விசுவநாதனின் இனிய குரலும் அவரது மகத்தான திட்டமும் நாணுவின் பிரமையிலிருந்து நீங்கவில்லை. அவனுக்கு உள்ளூற ஒரு பெருமை. இந்த ஒப்பந்தம் உருவாவதற்கு அவனும் துணையாக இருந்திருக்கிறான் அல்லவா? பணிக்கருடன் அவனும் முதலாளியைச் சந்தித்துப் பேசியிருக்கிறான் அல்லவா?

வேலைநிறுத்தம் கைவிடப்பட்டது. அதற்கு முன் கூடிய கூட்டத்தில் நாணுவையும் ஓரிரு வார்த்தைகள் பேசுமாறு பணிக்கர் கூறினார். நாணு பேசினான். கூட்டத்தில் பேசிப் பழக்கமில்லை அவனுக்கு. ஆனால் விசுவநாதனின் சந்திப்பை விளக்கிச் சொல்ல முனைந்தபோது அவனையும் அறியாமல் பேச்சு நன்றாகவே அமைந்தது.

''ஒரு வலுவான தொழிற்சங்க இயக்கம் எப்படிப்பட்ட முதலாளி வர்க்கத்தின் நெஞ்சிலும் ஆணியைப் பாய்ச்சியே தீரும் என்பதை இன்று நம் தலைவருடன் சென்று காணும் வாய்ப்பை நான் பெற்றதற்குப் பெருமகிழ்ச்சி அடைகிறேன்....நமது கோரிக்கைகள் நியாயமானவை என்பதை முதலாளி உணர்ந்து கொண்டதோடு மட்டுமின்றி ஐந்து மாத போனஸ் தருவதாகவும் கூறிவிட்டார்.''

சபை கைகொட்டி ஆரவாரித்தது.

அன்றிரவு தூக்கத்தில்கூட நாணு இந்த வெற்றிப் பெருமிதத்தில் ஊர்வலமும் சொற்பொழிவுமாக மூழ்கினான். விசுவநாதனின் குரல் கனவிலும் காதில் ஒலித்தது. பணிக்கரின் ஆவேசப் பேச்சு ஒலித்தது.

நாணு விடியற்காலையிலேயே எழுந்து விட்டான். அணி அணியாக வேலைக்கு வரும் உழைப்பாளிகளையும் அவர்களை அழைக்கும் சங்கொலியையும் முற்றிலும் புதிய சூழ்நிலை அங்கு முளைத்து விட்டதையும் கண்டான்.

பளிச்சென்று அவன் காதில் ஒரு குரல் கேட்டது. அந்தக் குரலைத் தேடித்தான் இரவெல்லாம் அவன் அவதிப்பட்டான் போலிருந்தது. கிழிந்துபோன சித்திரத்தின் ஒரு பகுதியை மட்டும் கையில் வைத்துக் கொண்டு, அதன் மறு பகுதியை இத்தனை நேரமும் அவன் தேடிக் கொண்டுதான் இருந்திருக்கிறான். அவனுடைய மனம் ஏங்கித் துழாவிய அந்த மறு பகுதி இதோ காதில் ஒலிக்கிறது. இரண்டையும் ஒன்றாக்கிய பின் அந்தச் சித்திரம்தான் எத்தனை அழகாக இருக்கிறது!

''பையா! என்னோடு கோயம்புத்தூருக்கு வந்து விடுகிறாயா?... அங்கே உனக்கு ஒரு தங்கச்சிப் பாப்பா இருக்கிறாள். அவள் உன்னை அண்ணனாகக் கொண்டாடுவாள்... நீ காலேஜிலே படிக்கலாம்.'' லட்சுமி அம்மாளின் அழைப்பும், அந்த அழைப்பில் இருந்த அன்பும் அத்தனை காலமும் அவன் நெஞ்சிலிருந்து எவ்வாறு மறைந்தனவோ?

விசுவநாதன் யாரென்பது அவனுக்கு விளங்கி விட்டது.

'அடடே! அவரா?'

கூடத்திலிருந்தவாறே லட்சுமி அம்மாளுடன் அவர் சம்பாஷித்த கேலிப் பேச்சு காதில் விழுகிறது அவனுக்கு!

றப்பான சிகையலங்காரத்துக்கு ஆதாரமாக அமைகிறது

# லாய்ஜு

## ஹேர் க்ரீம்




கவர்ச்சியான கேசத்துடன் காண்பவர் அனைவரும் விரும்பி வாங்குவது லாய்ஜு. குளித்ததும் சீவுமுன் சிறிதளவு லாய்ஜு உபயோகித்தால் போதும், உங்கள் முடி மென்மை பெற்றுவிடுகிறது; படிய வாரிவிட முடிவதுடன் பளபளப்போடும் பொலிகிறது — இந்த மினுமினுப்பு தான் முழுதும் நீடிக்கவும் செய்கிறது.

இது ஒரு கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

CTC-5 TM

நாளுக்கு நாள்...

# உங்கள் மேனியெழிலை ஓங்கச் செய்வது ரெக்ஸோனு

அழகுசாதனத் தைலங்கள் இணைந்த விசேஷக் கலவையாகிய 'கேடில்' அடங்கியது ரெக்ஸோனு ஒன்றுதான் பூரிக்கும் இன்ப நறுமணம் நேரமெல்லாம் உங்கள்மீது நின்றுநிலவச் செய்வது ரெக்ஸோனு ஒன்றுதான். அன்றாடம் உபயோகியுங்கள் ரெக்ஸோனு.




'கேடில்' அடங்கிய ரெக்ஸோனு
உங்கள் மேனியெழிலுக்கு உகந்தது

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

ஆமாம். அவரேதான்! முன்பே தெரிந்திருந்தால் வலது கால் இப்போது முழுக்கக் குணமாகி விட்டதா என்று விசாரித்திருக்கலாமே! முதலியாரின் எண்ணெய், துண்டித்த காலையும் ஒட்ட வைத்துவிடும் என்பதில் அவனுக்குச் சந்தேகமில்லை. அவர் சிறந்த மருத்துவர். அதைவிடச் சிறந்ததொரு வேதாந்தி. உடலைச் சீராக்குகிறவர்கள் மனத்தையும் சீராக்க வேண்டியது அவசியம்தான். வைத்தியர்கள் மனிதாபிமானிகளாகவும் வேதாந்திகளாகவும் இருந்தாக வேண்டிய முக்கியத்துவத்தை முதலியார் வாழ்ந்து காட்டுகிறார். உடலியல் வேறு, உளவியல் வேறு என்று எண்ணலாமா? நோயாளி நுழையும்போதே அவனுடைய நோய் என்ன என்பதை முதலியார் கண்டு பிடித்து விடக் கூடியவர். இதெல்லாம் வேலூரில் இருந்தபோதே அவனுக்குத் தெரியவில்லை. இப்போது தெரிகிறது.

காலையில் எட்டு மணிக்கெல்லாம் முதலாளி வருவார். அவரைப் பார்க்க வேண்டுமென்று நாணு எண்ணிக் கொண்டான். அவருக்கே அவன் இன்னான் என்று தெரிந்தால் வியப்பு ஏற்படும்.

ஆனால் முதலாளியே அவனை அழைப்பதாக ஆள் வந்து சொன்னான்.

"வாப்பா, தொழிற்சங்க உபதலைவரே!... என்னை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டாயல்லவா?... ஆனால் லட்சுமியை உன்னால் ஏமாற்ற முடியாது. அவள் கண்டுபிடித்து விட்டாள்" என்று சிரித்தபடியே வரவேற்றார் விசுவநாதன்.

"எனக்கே காலையில்தான் தெரிந்தது, மாமா!" என்றான் நாணு.

"அகப்பட்டுக் கொண்டாயா?... எனக்குத் தெரியும், நீ இங்கே வருவாயென்று" என்று கூறியவாறே மேசையின் மறைவிலிருந்து வெளியே வந்தாள் லட்சுமி அம்மாள்.

வேலூரிலிருந்து அவளுக்குக் கடிதம் வந்ததாம். நாணு புறப்பட்டுப் போய்விட்டானென்று கேள்விப்பட்டதும் அவள் தவித்துப் போனாளாம். அவன் யாரோ, அவள் யாரோ! அப்படியிருந்தும் அவனுக்காக அவள் தவித்த தவிப்பு கொஞ்ச நஞ்சமல்ல. நாணுவைப் பார்த்ததிலிருந்தே அவளிடம் அவனுக்கு அப்படியொரு பாசம் பிறந்து விட்டது.

நாணுவுக்கு அந்தப் பாசம் கண்ணில் நீரை வரவழைத்து விட்டது.

அவன் புறப்பட்டு வந்த மறுநாள் அவனுடைய அப்பா வந்தாராம். இதைக் கேட்டதும் நாணு திடுக்கிட்டான். கல்யாணியின் தங்க நகை காணமற் போனது, அதனால் எழுந்த பூசல், அவன் புறப்பட்டுப் போனது எல்லாம் லட்சுமி அம்மாள் சொன்னாள்.



"ஐயோ பாவம்! ஏன் உன் பிள்ளை இப்படி நடக்கிறான்?"
"நடக்கல்லே! காமிக் ஆக்டர் ஆகணும்னு பார்க்கிறான். அதுக்காக, நடிக்கப் பழகிக்கிறான்!"

"பத்மநாபன் ரொம்ப ரொம்பப் பெரியவண்டா, குழந்தை... தங்கையைக் கூட அவன் லட்சியம் செய்யவில்லை. பார்த்தாயா? உன்மீது அவனுக்கு அப்படி அபிமானம்!" என்றாள் லட்சுமி அம்மாள்.

அந்த அபிமானம்தான் அவனை அங்கிருந்து விரட்டிற்று என்பதை அவள் எப்படி அறிவாள்?

ஒரு மூச்சுப் பேசிவிட்டு அவள் ஓய்ந்தாள். ஒரு பெருமூச்சு விட்டவாறே நாணு எழுந்தான். அப்பா வந்திருந்த செய்தி அவனைக் கலக்கிவிட்டது! ஒரு நாள் வேலூரில் இருந்திருந்தால் அவரைப் பார்த்திருக்கலாம். அந்தப் பாக்கியம் இல்லாது போயிற்று. இனி அவரை அவன் எப்போது காணப் போகிறான்?

"எங்கே புறப்பட்டு விட்டாய்?... இனி மேல் நீ நம் வீட்டில்தான் இருக்க வேண்டும். தெரிந்ததா?" என்றாள் லட்சுமி அம்மாள்.

அவன் வெறுமனே நின்றான்.

"எத்தனை கனியாக இருக்கிறான்! வேலூர் மண் தெரிஞ்சுக்கோங்கோ."

"ஆமாம்."

"என்ன இது, 'ஆமாம்' போட்டுக் கொண்டு. அவனை வரச் சொல்லுங்கள் வீட்டுக்கு."

"அவன் வரமாட்டான்."

"அட ராமா! நீங்களே எதிர்க் கட்சி பேசுகிறீர்களே?"

"நான் பேசவில்லையடி. அவன் தொழிலாளர்களின் உபதலைவன். தெரியுமல்லவா?"

"அதனாலென்ன?"

"முதலாளி வீட்டில் தங்கலாமா?"

"நீங்க முதலாளியா? உங்களை விடப் பெரிய தொழிலாளி எவன் இருக்கிறான்?"

"அடியே, என் அந்தஸ்தையே சீர்குலைக்கிறாயே!"

"அந்தஸ்து பணத்தில் இல்லே. குணத்திலேதான்... இந்தக் காசும் பணமும் யாருக்கு வேணும்?.... போராட்டம்தான் ஒஞ்சு போச்சே.. வரச் சொல்லுங்க அவனை."

நாணு சிரித்தவாறே அவர்களைப் பார்த்து, "நான் வருகிறேன், அம்மா. என் வீடு இனி மேல் உங்களுடையதுதான்..." என்றான்.

"பார்த்தாயா, பிரித்துப் பேசுகிறாயே! எல்லாமே நம்முடையது என்று சொல்லடா, குழந்தை!" என்றாள் லட்சுமி அம்மாள்.

நாணுவின் நெஞ்சு பூரித்துப் போயிற்று. கண் நனைந்து போயிற்று. எதிரே நிற்கிறவள் வெறும் லட்சுமி இல்லை. மகாலட்சுமி, உலகையே அன்பால் பாலிக்கிற அருள் வடிவம்!

"அம்மா!" என்று அரற்றினான். பாசமும் உயிர் வேட்கையும் துடித்த அந்தக் குரல் கேட்டு லட்சுமி அம்மாள் மகிழ்ச்சிப் புன்னகை புரிந்தாள். விசுவநாதன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார். (தொடரும்)




# மபத்லால் க்ரூப்

## 2x2 வாயில்கள் & லினேக்கள்

தவிர, ''டெபிலேஸ்டு'' மற்றும் ''ம:.பினேஸ்டு'' ஆகிய தரங்களிலும் கிடைக்கும்.

LPE Alyars. M. 548 TM



# ஊர் வம்பு

★ கலைஞர்களுக்குப் பாராட்டு

★ அழகுப் போட்டி

★ பண்பாட்டுக் கழகம்

பத்மஸ்ரீ சிவாஜி கணேசனுக்கும், பத்மஸ்ரீ பானுமதிக்கும் தென்னிந்திய சினிமா எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில், பாராட்டுக் கூட்டம் நடந்தது. சுவையான தேநீர் விருந்துக்குப்பின் பாராட்டுக்கள் வழங்கப்பட்டன. அதன் பின்னர் சிவாஜி கணேசன் நன்றி கூறுகையில், ''நான் நிறையப் படங்களில் நடித்திருப்பதாக எல்லாரும் என்னைப் பாராட்டினார்கள். எனக்கு எத்தனை படங்களில் நடித்தேன் என்பதே நினைவு இல்லை; என் நடிப்பில் இன்னும் சிறப்பு ஏற்பட வேண்டுமானால் குறைந்தது இன்னும் இருபதாண்டுகளாவது நடிக்க வேண்டும்'' என்று அடக்கமாகக் கூறிக் கொண்டு அதன் மூலம் கலையைப் பயில்வதற்கு ஓர் எல்லையில்லை என்பதையும் சொல்லாமல் சொன்னார்.

''சினிமா விமரிசனங்களின் மூலம் நடிகர்கள் அடைந்திருக்கும் நன்மைகளைச் சொல்லி முடியாது. நாங்கள் நடிப்பில் மேலும் மேலும் முன்னேற வேண்டும் என்னும் ஆர்வத்தில்தான் விமரிசகர்கள் குறை நிறைகளை எடுத்துக் கூறிப் படங்களைப் பற்றி எழுதுகிறார்கள். ஆனால் கலைஞர்களுக்கும், கலை விமரிசகர்களுக்கும் நெருங்கிய தொடர்பும், நல்லெண்ணமும் இருக்க வேண்டும்; இரு பகுதியினரும் ஒரே குடும்பமாக, ஆலமரம் போல் பெரிதாக வாழ வேண்டும்......'' என்று கூறினார்.

தலைமை தாங்கிய சினிமா எழுத்தாளர் சங்கத் தலைவர், கரீம் தம் முடிவுரையில், ''சினிமா விமரிசகர்களும், கலைஞர்களும் ஒரு குடும்பமாக ஒருநாளும் வாழ முடியாது. படங்களில் காணும் குறைகளைச் சொல்லித்தான் ஆக வேண்டும். இரு பகுதியினரும் ஒரு குடும்பமாக வாழ முற்பட்டால் குற்றங் குறைகளை எடுத்துச் சொல்லும் ஆற்றலை விமரிசகர்கள் இழந்து விடுவார்கள்'' என்றார்.

அந்த இரு வகை அபிப்பிராயங்களும் பாராட்டு விருந்துக்கு வந்திருந்தவர்களின் சிந்தனைக்கு நல்விருந்தாக அமைந்தன.

ஃ ஃ ஃ

சென்னை பையர் தியேட்டரில் பெண்களுக்கான உடை அலங்காரக் காட்சியும் அழகுப் போட்டியும் நடைபெற்றன. அவ்வப்போது மாறி வரும் பெண்களின் நாகரிகத் தோற்றங்களைப் படம் பிடித்துக் காட்டும் 'ஃபெமினா' என்ற பத்திரிகை ஸ்தாபனத்தினரும் அழகு சாதனங்களைத் தயாரிக்கும் லக்மே ஸ்தாபனத்தினரும் இணைந்து இந்தப் போட்டிகளை நடத்தினர். வெளிநாடுகளில் அழகுப் போட்டி நடக்கும் போது பெண்கள் நீச்சலுடையில் தோன்றுவர். இங்கு அம்முறை கூடாது என்று கருதப்படவே அழகுப் போட்டியில் கலந்து கொண்டவர்கள் புடவை அணிந்தே மேடையில் தோன்றினர். பாரதப் பண்புக்கு இதுதான் ஏற்றது எனக் கருதினார்களோ என்னமோ? அடுத்தாற் போல் பெண்களின் நவீன பாணி உடைகளை அணிந்து வந்து காட்டினர் பல பெண்கள். இந்த நவ நாகரிக ஆடைகளுள் ஒன்றாக நீச்சலுடையும் இடம் பெற்றிருந்தது. அதை அணிந்து காட்டவும் சில அணங்குகள் வந்திருந்தனர்! 'ஏன் இந்தப் பாரபட்சம்?' என்று கேட்டு அழகுப் போட்டியில் கலந்து கொண்டவர்கள் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்று யோசனை கூறுகிறார் இக்காட்சிகளுக்குச் சென்று வந்த ஒருவர். அல்லது பிரிட்டனில் சமீபத்தில் நிகழ்ந்தது போல் சிறந்த அழகியைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை ஒரு கம்ப்யூட்டர் இயந்திரத்தினிடமும் ஒப்படைத்து விடலாம்!

ஃ ஃ ஃ

திருமணம் செய்து கொள்ளவிருக்கும் வாலிபர்களுக்கு ஒரு மகிழ்ச்சிகரமான செய்தி! தங்களுக்கு வரவிருக்கும் மனைவி இப்படியெல்லாம் இருக்க வேண்டுமென்று கற்பனை செய்து கொண்டு அத்தகைய பெண் எங்கே கிடைப்பாள் என்று கவலைப் படத் தேவையில்லை. மயிலாப்பூர் சாந்தோம் ஹைரோடிலுள்ள 'கல்ச்சரல் அகாதமி'யில் கல்வி பயின்ற பெண்ணா என்று பார்த்துக் கொண்டால் போதும். அங்கு மனையாட்டிகளாகப் போகும் மங்கைகளுக்குத் தேவையான எல்லாவற்றையும் கலைக் கண்களோடு கவனித்துக் கற்றுத் தருகிறார்கள். வீட்டை அலங்கரிப்பது, குழந்தைப் பராமரிப்பு, சமையல் கலை, கணவனுக்கு வீட்டிலேயே காரியதரிசியாகப் பணியாற்றச் சுருக்கெழுத்து, தட்டெழுத்து இவை தவிர மனையியல், வாழ்க்கை இப்படி அவர்கள் பாடப் பட்டியலில் பலப் பல இடம் பெற்றிருக்கின்றன. இந்தப் பண்பாட்டுக் கழகத்தின் பட்டமளிப்பு விழா, இம்மாதம் 12ந் தேதி பூஜ்யர் டாக்டர் அருணப்பாவின் தலைமையில் நடந்தது. தொழில் துறை அமைச்சர் வெங்கடராமன் தகுதிப் பத்திரங்களை வழங்கினார். கல்விச் செல்வம் கைகூடினாலே ஒரு தனி அழகுப் பொலிவு ஏற்பட்டு விடும். அன்று பட்டம் பெற்ற பாவையரிடம் அந்த அழகு பிரகாசித்தது மனத்துக்கு ரம்மியமாக இருந்தது.

## அநாயாசமாய்ச் சவாரி செய்ய உகந்தது பி.எஸ்.ஏ. BSA

பிரபலமிக்க பி. எஸ். ஏ. — இலேசானது, உறுதியானது, துரிதமாகச் செல்ல வல்லது—அது திரும்பவும் வந்துள்ளது. உற்சாகமான இளைஞர்கள் அநாயாசமாக சைக்கிள் ஓட்டும் மகிழ்ச்சியை மீண்டும் பெற, பி.எஸ்.ஏ. இப்போது இந்தியாவிலேயே தயாராகிறது. அமைப்பு அழகுக்கும் அயராத சேவைக்கும் உலகப் புகழ்பெற்றது பி.எஸ்.ஏ. உலகில் இப்பகுதியில் சிறந்த சைக்கிள்களைத் தயாரித்து வருபவர்களால் இப்போது பி. எஸ். ஏ. சைக்கிள் அதன் உயர்ந்த தரத்திற்கேற்பத் தயாரிக்கப்படுகிறது.

சிறந்த சைக்கிள் வேண்டுமா?
பி.எஸ்.ஏ.வைத் தேர்ந்தெடுங்கள்





பி.எஸ்.ஏ. உங்கள் மனைக்குரிய
உயர்ந்த சைக்கிள்

**தயாரிப்போர்:** டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ் 53.
**உரிமையாளர்கள்:** ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்.



# காட்டுப் பூ



சாணு

ஒரு சுதேச சமஸ்தானம். அங்குள்ள ஒரு சிறு கிராமத்தில், ஓர் ஏழைக் குடும்பம் வசித்து வந்தது. அதில் பிறந்த ஒரு சிறுவன் கல்வியில் கெட்டிக்காரனாய் விளங்கினான். ஆனால், பாவம், பள்ளிக்கூடச் சம்பளம் கட்டவோ, புத்தகங்கள் வாங்கவோ அவனுக்குப் பணம் கிடைக்கவில்லை. தந்தையிடம் பணம் கேட்டான். அவர் சட்டையை உதறிக் காட்டி, ''என்னிடம் ஒன்றும் கிடையாது'' என்று சொல்லி விட்டார். ஆனால் சிறுவன் மனம் தளரவில்லை. ஒரு நாள் மகாராஜாவிடமே நேரில் போனான். உதவி செய்யும்படி வேண்டிக் கொண்டான். மகாராஜா சிறுவனின் அறிவுக் கூர்மையைக் கண்டு மகிழ்ந்து, அவனுடைய கல்விச் செலவு முழுவதையும் தாமே ஏற்றுக் கொள்வதாய் உறுதியளித்தார். சிறுவன் அளவுகடந்த மகிழ்ச்சியடைந்தான். கடவுளைப் போற்றி விட்டுக் கல்வியில் கருத்தைச் செலுத்தினான். ஆசிரியர்களும் பேராசிரியர்களும் போற்றும்படியாய்ச் சிறப்புடன் பரீட்சைகளில் தேறினான். பட்டமும் பெற்றான். மகாராஜா மேல்படிப்புக்காக அவனை அமெரிக்காவுக்கு அனுப்பினார். கொலம்பியா பல்கலைக் கழகத்தில் சேர்ந்து படித்தான். 'டாக்டர்' பட்டமும் பெற்றான். இந்தியாவுக்கு வந்தான். மகாராஜா அவனைத் தம் அரசாங்கத்தில் ஒரு முக்கிய இலாகாவுக்குத் தலைமை அதிகாரியாய் நியமித்தார். ஆனால், கீழேயிருந்த அதிகாரிகள் யாரும் அவனை மதிக்கவில்லை. அவனருகே செல்வதையோ அவனுடன் பேசுவதையோ அவர்கள் வெறுத்தார்கள். 'பைல்'களைக் கையில் கொடுக்காமல், அப்படியே மேஜை மீது போட்டுவிட்டு வந்துவிடுவார்கள்; தொட மாட்டார்கள். ஏன்? 'தீட்டாகி விடும்' என்பதற்காக!

'டாக்டர்' பட்டம் பெற்று அதிமேதாவியாய் விளங்கிய போதிலும், தாழ்த்தப்பட்ட வகுப்பில் பிறந்தவர் என்பதற்காக அந்த இளைஞரை — டாக்டர் பீமராவ் ராம்ஜி அம்பேத்கரை — பரோடா சமஸ்தானத்தில் உள்ள ஒரு சேவகன்கூட மதிக்கவில்லை !

ஒரு ஹோட்டலில் அவர் ஜாகை வைத்துக் கொண்டிருந்தார். அவர் ஹரிஜன் என்பது தெரிந்ததும் ஹோட்டல் சொந்தக்காரர் அவரை வெளியே போகும்படி கூறிவிட்டார். வேறொரு ஹோட்டலுக்குப் போனார். அங்கும் அதே மரியாதை கிடைத்தது. உண்ண உணவு கிடைக்காமல், இருக்க இடம் இல்லாமல் அவர் திண்டாடினார். எங்கும் அவருக்கு அவமரியாதை. யாரும் அவரை மதிக்கவில்லை. பொதுவாக, தன்மதிப்புள்ள மனிதனாக வாழவே அவரால் முடியவில்லை. வெறுப்பும், கோபமும், ஏமாற்றமும் அவர் உள்ளத்தில் பொங்கின.

வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டு அவர் பம்பாய்க்குப் போனார். அன்று முதல் அவர் ஹிந்து மதத்தை வெறுத்தார்; அதன் தீராப் பகைவராகி விட்டார்.

பம்பாயில் வக்கீல் தொழில் நடத்தினார். ஏராளமாய்ப் பணம் கிடைத்தது. இங்கு அவர் சாதி வேற்றுமையால் கஷ்டத்துக்குள்ளாகவில்லை. ஏனெனில், அது எல்லா இன மக்களும் வாழக்கூடிய நகரம் அல்லவா? விரைவில் எல்லோருக்கும் தெரிந்த பிரமுகர்களுள் ஒருவரானார். 1926ம் ஆண்டு அவர் பம்பாய் சட்டசபை அங்கத்தினரானார்.

பிரித்தாளும் சூழ்ச்சியில் வல்லவர்களான ஆங்கிலேயர்கள், ஹிந்து மதத்தின் மீது பகைமை கொண்டிருந்த டாக்டர் அம்பேத்கரைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினார்கள். வட்ட மேஜை மகாநாட்டுக்குத் தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதியாய் அவரை அனுப்பினார்கள். அங்கு அவர் ஹரிஜனங்களுக்குத் தனித் தொகுதி பெற பெரு முயற்சி செய்தார். பிரிட்டிஷாரும் அவருடைய விருப்பத்தை நிறைவேற்றும் முறையில் 'வகுப்புத் தீர்ப்'பை வழங்கினார்கள். காந்திஜி இதை எதிர்த்து உண்ணாவிரதம் இருந்தார். அப்போது அவர் அம்பேத்கரிடம், ''என் உயிர் உங்கள் கையில்தான் இருக்கிறது'' என்று கூறினார். ஆனால் டாக்டர் அம்பேத்கர் சற்றும் அசையவில்லை. கடைசியில் ராஜாஜியும் வேறு சிலரும் செய்த அரிய முயற்சிகளால் ஹிந்து மதத்தைத் துண்டாக்கும் 'வகுப்புத் தீர்ப்பு' ஒழிந்தது.

டாக்டர் அம்பேத்கர் தாழ்த்தப்பட்ட மக்களுக்குத்தாமே பிரதிநிதி என்று கருதினார். அவர்களுடைய நன்மைக்காகப் பாடுபட முன் வந்த சாதி ஹிந்துக்களை அவர் நம்பவில்லை. காந்திஜியைவிட அதிகமாய் ஹரிஜனங்களுக்

ளுப் பாடுபட்டவர் யார்? அத்தகைய உயர்ந்த மனிதரே அவர். 'ஹரிஜனங்களின் மாபெரும் எதிரி' என்று கூறத் தயங்கவில்லை. ஆனால், நல்ல காலம், ஹரிஜனங்கள் அவருடைய பேச்சுக்குச் செவி சாய்க்கவில்லை. அவரைப் பின்பற்றவும் அவர்கள் தயாராக இல்லை. என்ன விந்தை! 1946ம் ஆண்டு நடந்த தேர்தலில் அவர் தோல்வி யடைந்தார். இதற்கப்புறம் இன்னும் சற்று அதிகமாய் அவர் காந்திஜியையும், காங்கிரஸையும் தூற்றினார். ஆனால் நம் தலைவர்கள் அதைப் பொருட்படுத்தவில்லை. எப்படியாவது நாட்டின் நன்மைக்கான முறையில் அவரைப் பயன்படுத்திக் கொள்ளவே விரும்பினார்கள்.

சுதந்திரம் வந்ததும் அவரைச் சட்ட மந்திரியாக நியமித்தார்கள். அரசியல் வகுக்கும் பொறுப்பை அவருக்கு அளித்தார்கள். அது மாத்திரம் அல்ல. ஹிந்து மதத்தை வெறுத்த அவரிடம் — மனு ஸ்மிருதியைக் கொளுத்திய அவரிடம் -- ஹிந்து மதத்தைத் திருத்தும் பொறுப்பும் ஒப்படைக்கப்பட்டது. இரண்டையும் அவர் திறமையாய்ச் செய்தார்.

அவர் சிறந்த அறிஞர். எந்த விஷயத்தைப் பற்றியும் மணிக் கணக்காய்ப் பேசக் கூடிய திறமை அவருக்கு இருந்ததாம். ''இந்தியாவில் உள்ள ஆறு பெரிய மேதைகளில் அவரும் ஒருவர்'' என்று ஓர் அயல் நாட்டுப் பிரமுகர் அவரைப் பாராட்டிக் கூறியுள்ளார். ஆனால் அந்த மேதையின் அறிவையும் திறமையையும் இந்தியா போதிய அளவு பயன்படுத்திக் கொள்ள முடியவில்லை. பச்சை வகுப்புவாதியாக அவர் மாறிவிட்டார். அதிருப்தி, ஆத்திரம், பிடிவாதம், கோபம்— இவற்றின் பின்னமாய் அவர் இந்திய அரசியலில் விளங்கினார். தாழ்த்தப்பட்டவர் என்பதற்காக இளமையில் அவர் பட்ட கஷ்டம், ஆறாத் தழும்பு போல, என்றென்றும் அவர் உள்ளத்தில் நிலைத்து நின்று விட்டது.

அவர் நல்ல ரசிகர். புத்தகப் பைத்தியம் கொண்டவர். பல இலட்சக் கணக்கான ரூபாய் மதிப்பிடக் கூடிய ஒரு நூல் நிலையம் அவருடைய இல்லத்தில் இருந்தது.

அரசியலில் அதிருப்தி ஏற்படும்போதெல்லாம், தாம் ஹிந்து மதத்தை விட்டுவிடப் போவதாகவும், வேறு மதத்தைத் தழுவப் போவதாகவும் அவர் கூறுவதுண்டு. ஒரு முறை தாம் இஸ்லாம் மதத்தைத் தழுவப் போவதாய்ச் சொல்லிவிட்டார். அவ்வளவு தான்; ஏராளமான முல்லாக்களும் மௌல்விகளும் அவருடைய வீட்டுக்குப் படையெடுத்துவிட்டார்கள்! இஸ்லாத்தின் சிறப்பைப் பற்றித் தங்கள் பேச்சு வன்மையை யெல்லாம் உபயோகித்துப் பேசினார்கள். டாக்டர் அம்பேத்கர் அனைத்தையும் கேட்டு விட்டு, ''நல்லது, போய் வாருங்கள்!'' என்று சொல்லி விட்டார். மற்றொரு முறை கிறிஸ்துவப் பாதிரிகள் பல நாட்கள் வரை அவரிடம் சென்று, கிறிஸ்து நாதரின் பெருமையைப் பற்றியும், கிறிஸ்து மதத்தைப் பற்றியும் கூறினார்கள். டாக்டர் அம்பேத்கர் அதைக் கேட்டுவிட்டு, ''இதெல்லாம் எனக்குத் தெரியும். மதம் மாறுவதாயிருந்தால் நானே மாறிக்கொள்வேன்'' என்றார்.

இறுதிக்காலத்தில் சொன்னபடியே செய்து விட்டார். அதாவது, ஹிந்து மதத்தை விட்டுப் புத்த மதத்தைத் தழுவினார். அஹிம்ஸா மூர்த்தியான புத்த பகவான் அவருக்குச் சாந்தியை அளிப்பாரென்பதில் ஐயமில்லை.

இத்தகைய மேதையை நினைவு கூறும் முறையில் அவருடைய உருவம் பொறித்த தபால் தலையை இம்மாதம் 14ந் தேதி இந்திய அரசாங்கம் வெளியிட்டிருக்கிறது.




நமது மறைந்த பாரத ரத்னம் ஜவாஹர்லால் நேரு நமது சிந்தனையில் புரட்சி வேகத்தைக் கொண்டுவர முயன்றார். ஆனால் நம்முடைய புராதனப் பாரம்பர்யத்தின் பெருமையை அவர் நமக்கு நினைவுபடுத்தியபடியே இருந்தார். நாட்டின் பல இடங்களில் அவர் கூறிய கருத்துக்கள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை. நாற்பத்தெட்டு பக்கங்கள் கொண்ட இப் புத்தகத்தில் உள்ள அவரது கருத்துக்களைப் படிக்கப் பத்து நிமிடங்கள் போதுமானதாயிருக்கலாம். ஆனால் அப்படி மேலெழுந்தவாரியாகப் படித்துப் போட்டுவிடக்கூடிய புத்தகமல்ல இது. அக்கருத்துக்களை நாம் நன்றாகப் புரிந்து கொண்டு பல மணி நேரம் சிந்திக்க வேண்டியது அவசியம்.

## ஜவாஹர்லால் நேரு

'அன்பு - அது புனிதமானது மட்டுமல்ல. தெய்விகமானது. உலகில் உள்ள சகல உயிர்களிடத்தும் அன்பாக இருப்பதுதான் ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டு. அன்பால் உலகை ஆளலாம்' - இவ்வாக்கியத்துக்கு உதாரணமாகத் திகழ்பவர் நேரு.

'எனது மக்களை நானறிவேன். அவர்களை நான் நேசித்தேன். அந்த ஆயிரமாயிரம் கண்களோடு என் கண்கள் அளவளாவின....' - நேருஜி இந்திய மக்களின் மீது வைத்திருந்த பற்றும் மக்களிடமே அவர் கொண்டிருந்த அன்பு நிறைந்த பாசப் பிணைப்பும் தெரிகிறது.

'ஜனநாயகக் கோட்பாடானது கடைசிக் கட்டத்தில் மக்களின் வளர்ச்சிக்கும் சமுதாயத்தின் உயர்வுக்கும் வழிகோலுகிறது. நமது அரசியல் சாஸனத்தில் கூறியுள்ளபடி தனி மனித சுதந்திரத்துக்கு நாம் அதிக முக்கியத்துவம் கொடுக்கிறோம். மனித வர்க்கத்தின் சிந்தனை சக்தியும், வீர நோக்கும் வளர வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். இதனாலெல்லாம்தான் நாம் ஜனநாயகக் கோட்பாட்டை நிச்சயமாக ஏற்றுக் கொண்டிருக்கிறோம்....'

மறைந்த பிரதமர் நேருவின் கருத்துக்களோடும், அவருடைய படங்களோடும் உள்ள இந்தப் புத்தகம் ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டியதாகும்.

-- ஆ. ஜெயசீலன்

வெளியீடு: தமிழ்நாடு சர்க்கார் செய்தி துறை நெறியாளருக்காக, இந்திய அரசாங்க செய்தி ஒலிபரப்பு அமைச்சகத்தின் விளம்பர - கண்காட்சித் துறையினர்.



# அகண்ட பரப்புடன் சாலையை பத்திரமாக இறுகப் பற்றுகிறது

பயர்ஸ்டோன் டீ லக்ஸ் சாம்பியன் கார் டயரிலுள்ள பிரபல "ராப்-அரவுண்ட்" டிரெட் அமைப்பின் அகலம் 18% அதிகம்... அபாரமான பிடிப்புறுதி பெறுவதற்காக சாலைமீது அதிக ரப்பரைப் பதியச் செய்கிறது; எனவே, எவ்வகை சீதோஷ்ண நிலையிலும் எத்தகைய சாலையிலும் சரி, நீங்கள் வளைவுகளை முனைத் திருப்பங்களை எதையும் சமாளிக்க உதவுகிறது. இதோ முடிவாக உல்லாசமாக ஓட்டும் சுகத்தைப் பெற்றுவிட்டீர்கள்.

ஸுப்-ர்-டஃப் ரப்பர்— அதிகச் செலவின்றி ஆயிரக் கணக்கான மைல்கள் அதிகமாக ஓடவும், அதிக டிரெட் பெறவும் உதவுகிறது.

நான்-ஸ்கிட் ஆங்கிள் ஷோல்டர் டிரெட்- வழுக்கும் ஆபத்தையே தவிர்க்கிறது.

ராப்-அரவுண்ட் டிரெட் அமைப்பு - சாலைமீது, அதுவும் முனைத்திருப்பங்களிலே அபாரமான பிடிப்புறுதி தருகிறது.

## Firestone

### பயர்ஸ்டோன் டீலக்ஸ் சாம்பியன் டயர்

### ராப்-அரவுண்ட் டிரெட் பொருத்தியது



Stroesachs-2 24 TAM

மறு நாள் காலை அவர்கள் ஜலந்தருக்கு வந்து சேர்ந்தார்கள். சீதாவின் மாமியார் தனக்குப் பேரன் பேத்திகளை அளித்திருக்கக் கூடிய இந்த அழகான பெண்ணைப் பார்த்தவுடன் கண்ணீர் தளும்ப நின்றாள்.

''ஒரு வேளை அவன்....'' என்று ஏதோ ரகசியம் பேசுவதுபோல் கூற ஆரம்பித்தவர் தம் மகனை நினைத்துக் குலுங்கிக் குலுங்கி அழுது விட்டார்.

அந்த அம்மாளின் கணவர் சீதாவின் தந்தையிடம் தாம் வாக்குக் கொடுத்தது உண்மைதான் என்று ஒப்புக் கொண்டார். கண்டிப்பாக அவ்வாக்குறுதியை நிறைவேற்றுவதாகவும் சொன்னார். ஒரு வாரத்துக்குள் முழுத் தொகையையும் ரொக்கமாகவே கொடுத்தும் விட்டார். சீதா அவ்வாண்டே டெல்லியில் லேடி ஹார்டிஞ்ச் வைத்தியக் கல்லூரியில் சேர முடிந்தது.

1918ம் வருடம் மே மாதம், யுத்தம் முடிவதற்குமுன், சுப்புலக்ஷ்மிக்கும் அவள் தாயாருக்கும் காஞ்சீபுரத்தில் நடக்கவிருந்த சமூகப் பிரச்னைகளைப் பற்றிய ஒரு கூட்டத்தில் கலந்து கொள்ளும்படி அழைப்பு வந்தது. அக்கூட்டத்துக்கு வந்திருந்தவர்கள் பெரும்பாலும் சமூகச் சீர்திருத்தவாதிகள், காங்கிரஸ்காரர்கள். அந்தக் கூட்டத்துக்கு ஸ்ரீமதி சரோஜினிநாயுடு தலைமை தாங்கினாள். சுப்புலக்ஷ்மிக்கு இந்தக் கூட்டம் ஒரு விதத்தில் வெறுப்பு உண்டாக்கும் அநுபவமாகவும் இருந்தது. வந்திருந்த பிரதிநிதிகள் அங்கு கொண்டு வரப்பட்ட தீர்மானங்களைப் பற்றிக் காரசாரமாக, முரட்டுத்தனமாக வாதாடியதில் குழப்பம் மிகுந்தது. கைகலந்து விடுவார்களோ என்றுகூடத் தோன்றியது. அவர்களைப் பண்புடன் நடந்து கொள்ளும்படி செய்வதற்கு ஸ்ரீமதி நாயுடு தம்முடைய பிரசித்தி பெற்ற வாக்குவன்மையையும் இனிய வசீகர சுபாவத்தையும் ஒன்று திரட்டித் திறம்பட உபயோகிக்க வேண்டியிருந்தது.

வெகு சில பெண்களே அந்தக்கூட்டத்தில் கலந்து கொண்டிருந்தனர். பலருக்கு அவர்கள் இந்த மட்டும் வந்ததே அதிசயமாகப்பட்டது. அப்போதே பெண்மணிகள் பொது விஷயங்களின் நடப்பில் தங்களுக்குப் பங்கு கேட்க ஆரம்பித்து விட்டிருந்தனர். தேசிய இயக்கத்தின் வளர்ப்புத் தாய் என்று கருதப்பட்ட ஸ்ரீமதி அன்னிபெஸண்ட் ஏற்கனவே ஒரு தடவை காங்கிரஸ் தலைவராகப் பணியாற்றியிருந்தார். அந்த அம்மையாரைப் பின்பற்றியவர்களில் ஒருவரான மிஸஸ் மார்கரெட் கஸின்ஸ் (Mr Margaret cousins) அயர்லாந்தைச் சேர்ந்த மாது. பெண்கள் முன்னேற்றத்தில் ஈடுபட்டவர், பிரம்மஞான சபையின் அங்கத்தினர். அவர் 1917ம் ஆண்டு இந்திய மாதர் சங்கத்தைத் தொடங்குவதில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டார். அந்தச் சங்கத்திலிருந்து பிரதிநிதிக் குழு



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகாஃபெல்டன்
— அநுத்தமா

ஒன்று சரோஜினிநாயுடுவின் தலைமையின் கீழ் மிஸ்டர் மாண்டேகுவை அவர் சென்னைக்கு வந்திருந்தபோது பேட்டி கண்டு, இந்தியப் பெண்களுக்கும் ஆண்களைப் போன்ற சம உரிமை தரப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டது.

அவர்கள் எழுதிப் படித்த விண்ணப்பத்தில் கூறப்பட்டதாவது: இந்த உரிமைகள் நியாயமாக வழங்கப்பட வேண்டுமாயின் கல்வி முறைத் திட்டமே மாற்றியமைக்கப்பட வேண்டும். தற்போது ஆறு கிராமங்களுக்கு ஒன்று என்ற ரீதியில்தான் பள்ளிக்கூடம் என்ற பெயரில் ஏதேனும் இருக்கிறது. நாட்டில் உள்ள நூறு பையன்களில் பதின்மூன்று பேர்களுக்குத்தான் கல்வி அளிக்கப்படுகிறது. பெண்களில் நூற்றுக்கு ஒருத்திதான் கல்வி அறிவு பெறுகிறாள். பையன்கள் பெண்கள் எல்லோருக்கும் கூடிய சீக்கிரத்தில் ஆரம்பக் கல்வி அளிக்கப்பட வேண்டும். இதைச் சாதிப்பதற்கு ஆசிரியைகள் பயிற்சிக் கல்லூரிகளின் எண்ணிக்கை அதிகரிக்க வேண்டும். நாட்டின்

எல்லாப் பகுதிகளிலும் விதவை இல்லங்கள் நிறுவப்பட வேண்டும். விதவைகளுக்கும் மற்றும் ஆசிரியத் தொழிலில் பயிற்சி பெற விரும்புவோருக்கும் உபகாரச் சம்பளங்கள் அளிக்கப்பட வேண்டும்.

மாண்டேகுவின் டயரியைப் பார்க்கும் போது, அவர் இந்தப் பிரதிநிதிகளை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை என்றும், நாட்டிலுள்ள எல்லோருடைய கருத்துக்களையும் இந்தக் குழுவினர் பிரதிபலிக்கவில்லை என்று அவர் கருதியதாகவும், அவர்கள் கிளர்ச்சி செய்வதையே தொழிலாகக் கொண்டவர்கள் என்று அவர் நினைத்ததாகவும் தெரிகிறது.

அவர் கருத்து தவறானது. அவர்களில் சிலர் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டவர்கள் என்பது உண்மைதான். ஆனால் அவர்கள் எடுத்துக் கூறிய அபிப்பிராயங்கள் யாவும் சாரதா லேடீஸ் யூனியன் உட்பட, பல பெண்கள் சங்கத்தைச் சேர்ந்த சாதாரண அங்கத்தினர்களால் ஆமோதிக்கப்பட்டவையே. அன்னிபெஸண்ட், மார்கரெட் கஸின்ஸ், பிரதிநிதிக் குழுவின் தலைவியான சரோஜினி நாயுடு ஆகிய ஒவ்வொருவரும் தாங்கள் வாதாடும் விஷயங்களைக் குறித்து ஐயம் திரிபற அறிந்தவர்கள். வருங்காலத்தைப் பற்றிய அவர்களுடைய அபிலாஷைகள் யாவும் அவர்கள் இன்று கண்கூடாக நடக்கக் கண்ட சாதனைகளை ஒட்டியேதான் இருந்தன. ஐஸ்ஹவுஸில் படிப்பு வாசனையே அறியாமல் வந்து சேர்ந்த குழந்தைகள், சில மாதங்களுக்கெல்லாம் திருவல்லிக்கேணி உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்து, அங்கு ஏற்கனவே உள்ள மற்றப் பெண்களுடன் போட்டியிடும் அளவுக்கு முன்னேறுவதைப் பார்த்து வியந்தவர்கள் தான் அவர்கள் அனைவரும்.

அடுத்த சில ஆண்டுகளில் இந்திய மாதர் சங்கத்தின் அங்கத்தினர்கள் மிகவும் பாடுபட்டார்கள். அதற்குப் பலனும் இருந்தது. பெண்களுக்கு முழு அரசியல் உரிமை பெறுவதில் தாங்கள் எதிர்பார்க்கத் துணிந்ததைவிட அதிக வெற்றி கண்டார்கள். 1920ம் ஆண்டு அமுலுக்கு வந்த புதிய அரசியல் சட்டத்தின்படி பெண்களுக்கு நேரிடையாக வோட்டுரிமை அளிக்கப்பட வில்லை. அதற்குப் பதிலாகப் பெண்களுக்கு வோட்டுரிமையை அளிப்பது சரி என்று நினைத்தால் அதைச் செய்வதற்கான அதிகாரம் மாகாண சட்டசபை அங்கத்தினர்களுக்கு அளிக்கப்பட்டது. சென்னை சட்டசபைதான் முதலில் அவ்வாறு பெண்களுக்கு வோட்டுரிமை கிடைக்கச் செய்தது.

அது நடந்தது 1921ம் ஆண்டு மார்ச்சு மாதம்.

சென்னை ராஜதானிப் பெண்களுக்கு இப்போது அளிக்கப்பட்ட அதிகாரமானது ஒன்றும் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டதல்ல. ஏற்கனவே உள்ள பழங்காலச் சம்பிரதாயத்தை மீண்டும் கடைப்பிடித்ததேயாகும் என்று ஸ்ரீமதி அன்னிபெஸண்ட் எடுத்துக் காட்டினார். பழங்காலக் [illegible] படித்துப் பார்த்ததில் முற்காலத்தில் பெண்கள் கிராமச்சாவடி, பஞ்சாயத்துத் தேர்தல்களில் வாக்குரிமை பெற்றிருந்தது மட்டுமல்ல, நியாயம் வழங்கும் கழகங்களில் பங்கு பெற்றிருந்தனர் என்பதற்குக்கூட ஓர் ஆதாரம் கிடைத்திருப்பதாக அவர் கூறினார்.

அரசாங்க ஊழியம் செய்தபடியால் சகோதரி சுப்புலக்ஷ்மியால் இந்திய மாதர் சங்கம் செய்த அரசியல் கிளர்ச்சிகளில் பங்கு கொள்ள முடியவில்லையாயினும், பல சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதற்குத் தன்னால் இயன்றதைச் செய்யலாம் என்று அவளுக்குத் தோன்றியது. இந்திய மாதர் சங்கத்தின் தலைவிகள் அடிக்கடி சாரதா மாதர் சங்கத்தில் பேசுவதற்காக அழைக்கப்பட்டனர். வாராந்தரக் கூட்டங்களில் கலந்து கொள்வோரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகியது. விவாதங்கள் சுவாரசியமாக அமைந்தன. மிஸ் பிரேகர் எனக்கு எழுதிய கடிதம் ஒன்றில், அங்கத்தினர்கள் கல்வி பெறும் ஆசையினால் உந்தப்பட்டு, பள்ளிக்கு வந்து பெண்களுடன் அமர்ந்து படிப்பதற்கு அனுமதி கோரினார்கள் என்று குறிப்பிட்டிருந்தாள். தங்களுடைய அபிப்பிராயங்களைக் கோவையாக, தெளிவாக உருவாக்குவதற்கும், சின்னச் சின்னக் கூட்டங்களில் பதற்றமில்லாமல் பேசுவதற்கும் அவர்கள் கற்றுக் கொண்டனர். அவர்களுக்கு ஓரளவு தன்னம்பிக்கை ஏற்பட்டதும், பலருக்குப் பிரியமில்லாத விஷயங்களைக் கூற அஞ்சும் சுபாவத்தை விட்டு விட்டார்கள். அவர்களுடைய பேச்சிலோ, பாவனையிலோ முரட்டுத்தனம் இருக்கவில்லை. பயனற்றுப் போன பழங்காலப் பழக்க வழக்கங்களைக் கண்டித்துப் பேசுகையில் அவர்களுடைய மென்மையான பேச்சும், அபிப்பிராயங்களின் நியாயத் தன்மையும்தான் அவர்களுக்கு ஆதரவு தேடித் தந்தன.

சிலசமயம் வேறு ஸ்தாபனங்களின் கூட்டங்களில் பேசும்படி சகோதரியை அழைத்தார்கள். சமயம் கிட்டியபோதெல்லாம் அவள் அவ்வாறே செய்தாள்.

1922ம் வருஷம் ஜூலை மாதம் வேலை உயர்வு கிடைக்கப் பெற்று, மிஸ் பிரேகர் தென்பிராந்திய வட்டத்துக்கு உதவி இன்ஸ்பெக்டராகப் போய் விட்டாள். அவள் அடிக்கடி சென்னைக்கு வந்துபோவாள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் சகோதரிக்கும் மற்றப் பெண்களுக்கும் எப்போதும் தங்களுடன் கூடவே மிஸ் பிரேகர் இனி இருக்க மாட்டாள் என்பதை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. சீக்கிரத்திலேயே, லேடி வில்லிங்டன் பள்ளிக்கூடம் என்று உரு மாறியிருந்த அந்த ஸ்தாபனத்துக்கு மேற்பார்வையாளராக மிஸ் ரயன் வந்து சேர்ந்தாள். மிஸ் பிரேகருக்குப் பதிலாக வந்த இவள் மிகவும் திறமைசாலியாகவும் இருந்தாள். எல்லோருக்கும் அவளைப் பிடித்திருந்தது. ஆனால் மிஸ் பிரேகரைப் போல் அவள் தங்களில் ஒருத்தியாக ஒன்றி விடுவாள் என்று அவர்களால் நம்ப முடியவில்லை.

1922ம் ஆண்டு டிஸம்பர் மாதம் லேடி வில்லிங்டன் ஹைஸ்கூல் திறக்கப்பட்டது.

இதுதான் மிஸஸ் ட்ரைஸ்டேலின் கடைசி சாதனையாக இருக்கும் என்பதை அப்பொழுது யாருமே நினைக்கவில்லை. ஆறு மாதங்கள் கழித்து 1923ம் ஆண்டு மே மாதம் அவள் இரண்டு வருஷ ரஜாவில் இங்கிலாந்துக்குச் சென்றாள். ஐஸ்ஹவுஸில் மிகவும் விமரிசையாகப் பிரிவு உபசாரணை நடந்தது. அதற்கு மிஸ் பிரேகரும், ஐஸ்ஹவுஸில் தங்கியிருந்து திருவல்லிக்கேணிப் பள்ளிக்கூடத்தில் படித்த அநேக பழைய மாணவிகளும் வந்திருந்தனர். வெளிப் பார்வைக்குக் கடின இதயம் படைத்தவள் போலத் தோன்றினாலும் மிஸஸ் ட்ரைஸ்டேல் அன்புள்ளம் கொண்டவள்தான். ஒரு காரியத்தைச் சாதிப்பதற்குக் குறுக்கே வரும் இடைஞ்சல்களை யெல்லாம் கிழித்து எறியக்கூடிய வைரம் போன்ற உறுதியான மனம் அவளுடையது என்பதை எல்லோரும் இதற்குள் அறிந்திருந்தனர்.

அன்று சித்தியும், சகோதரியும் மற்றப் பெண்களும் அவள் இல்லாமல் எவ்வளவு வெறிச்சென்று இருக்கும் என்றும், இரண்டு வருட காலம் பறந்து ஓடிவிடும் என்றும், அவள் திரும்பி வரும் நாளை எப்படி எல்லோரும் ஆவலுடன் எதிர்நோக்கியபடி இருப்பார்கள் என்றும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஆயின், அவள் திரும்பி வரவேயில்லை. இரண்டு வருட ரஜா முடிந்தவுடன் அவள் ராஜிநாமா கொடுத்து விட்டாள். அது அங்கீகரிக்கப்பட்டது. அவள் மீண்டும் இந்தியாவுக்கு வரவேயில்லை. மிஸஸ் ட்ரைஸ்டேலின் இந்தத் தீர்மானத்துக்குக் காரணம் அவளுடைய குடும்ப விவகாரங்கள் அல்ல என்று சகோதரிக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. அவள் பட்சபாதமாக நடந்து கொண்டாள் என்றும் பிராமணர்களுக்கு விசேஷச் சலுகை காண்பிக்க நினைத்தாள் என்றும் மற்ற குலத்தினருக்கு அவளிடமிருந்து நியாயம் கிட்டாது என்றும் ஓயாமல் நினைத்த ஜஸ்டிஸ் கட்சியினரின் இந்த மனப்பான்மை காரணமாகத்தான் அவள் மனம் நொந்து ராஜிநாமா செய்ய நேரிட்டது என்பது சகோதரியின் நம்பிக்கை.

உண்மை எதுவாக இருப்பினும், அவள் இல்லாமல் ஐஸ்ஹவுஸ் வெறிச்சோடிவிட்டது. நாடு முழுவதும் விதவைகள் இல்லம் பரவ வேண்டும் என்று இந்திய மாதர் சங்கத்தின் ஆசை, மிஸஸ் ட்ரைஸ்டேல் இன்னும் சிறிது காலம் இந்திய அரசாங்கப் பணியில் இருந்திருந்தால் ஒருவேளை நிறைவேறியிருக்கலாம். ஆனால் அப்போது இருந்த நிலைமையில், ஏற்கனவே செயல் புரிந்து வந்த சில விடுதிகள் இந்த நற்பணியைத் தொடர்ந்து செய்து வந்தனவேயொழியப் புதிய விதவை இல்லங்கள் தோன்றவில்லை.

## 6

1925ம் வருஷ வாக்கில் குழந்தை விவாகங்களுக்கு எதிர்ப்பு வலுவாகிக்கொண்டிருந்தது.

காந்திஜி இந்த இயக்கத்தை முழுமனத்துடன் ஆதரித்தார். சாஸ்திரங்களில் குழந்தை விவாகங்கள் அனுமதிக்கப்படவில்லை என்று அவர் கூறினார். வைதீகமான பண்டிதர்கள், புரோகிதர்கள் இதை ஒப்புக்கொள்ளவில்லை. ''இந்து சாஸ்திரத்தின்படி ஒரு பெண் வயதுக்கு வரும் முன்பே கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். அவள் வயதுக்கு வந்தவுடனே அவள் கணவன் அவளுடன் சேராவிட்டால் கருவை அழித்த குற்றத்துக்கு ஆளாகிறான்'' என்று ஒரு தென்னிந்தியப் புரோகிதர் எழுதினார்.

இந்தியப் பிரஜைகளின் மதக் கொள்கைகளிலும் பழக்க வழக்கங்களிலும் தலையிடுவதற்குப் பிரிட்டிஷார் எப்போதுமே தயங்கினார்கள். நூறு வருடங்களுக்கு முன்பு, 1828ம் ஆண்டில், கவர்னர் ஜெனரல் லார்டு வில்லியம் கேவண்டிஷ் பெண்டிங்க் (Lord William Cavendish Bentinck) தம்முடைய அரசியல் ஆலோசகர்களின் கடுமையான எதிர்ப்பையும் மீறி, உடன்கட்டை ஏறும் பழக்கத்தைத் தடை செய்தார். இதை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்கப்பட்டது. உடன்கட்டை ஏறுவது மத நியமங்களில் ஒன்று என்று வாதாடப்பட்டது. இதை லண்டனின் மிக உயர்ந்த நீதிமன்றமாகிய பிரிவி கௌன்சில் ஏற்கவில்லை.

புதிய சட்டத்துக்கு உட்பட்டு நடக்கிறார்களா என்பதைக் கண்காணிக்க அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். சில இடங்களில் சட்டம் மீறப்பட்டது.

(தொடரும்)



### அவர்கள் எங்கே?

வானவெளி வீரர் ககாரின் வீட்டுக்கு யாரோ ஒருவர் அவரைத் தேடிச் சென்றாராம். வீட்டு வேலைக்காரிதான் வீட்டில் இருந்தாள்.

வந்தவர்: ககாரின் இருக்கிறாரா?

வேலைக்காரி: இல்லை; விண்வெளியில் உலகத்தைச் சுற்றி வரப் போயிருக்கிறார்; கொஞ்சம் உட்காருங்கள். வந்துவிடுவார்.

வந்தவர்: அப்படியானால் ஸ்ரீமதி ககாரின் இருக்கிறாரா?

வேலைக்காரி: இல்லை. அவர் ரேஷன் வாங்கி வரக் கடைக்குப் போயிருக்கிறார். ககாரின் வந்து வெகு நேரத்துக்கு அப்புறம் தான் அவர் வந்து சேருவார்.

உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன்
குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக புத்திசாலித் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டுவருகிறது.

LPE Aiyars. F. 10 TM



கிறிஸ்துமஸுக்காக யோசேப்பு தன் வீட்டை அலங்கரித்தான். மூலைக்கு மூலை கிரேப்காகித ரிப்பனையும் நடுவில் ஆறு மூலை நட்சத்திரம் ஒன்றையும் கட்டித் தொங்க விட்டான். சுவர் துப்புரவாக வெள்ளையடிக்கப்பட்டுப் பால் போல் காட்சியளித்தது. காம்பவுண்டு கேட்டில் வில்லாக வளைத்து விடப்பட்ட மூங்கிலைக் கொடியில் தொங்கிய பல வண்ண விளக்குகள் கண்ணைப் பறித்தன.

வீட்டு அலங்காரம் முடிந்தவுடன் யோசேப்பு கோயிலுக்குப் போனான். அங்கே அலங்கரிக்கும் ஆட்களோடு தானும் ஓர் ஆளாகச் சேர்ந்து கொண்டான். இரு பக்கமுள்ள வாழைத் தோரணங்களிலிருந்து, கோயில் ஜெபம் நடக்கும் இடம் வரைக்குமுள்ள அலங்கார விளக்குகளைத் தன் செலவிலேயே வாங்கிக் கொடுத்திருந்தான். கோயில் காம்பவுண்டுச் சுவரெங்கும் மெழுகு வத்திகளை வெகு நேர்த்தியாகப் பற்ற வைத்தான். தும்பைப் பூவைப் போல் வெண்மையான எட்டு முழ வேட்டியை உடுத்தும் யோசேப்பு அன்று 'சூட்'

# கசங்கிய கண்கள்



அணிந்திருந்தான். ஆஜானுபாகுவான அவனுக்குக் கிறிஸ்துமஸ் உடுப்பு கச்சிதமாயிருந்தது. மாநிறமான மேனியுடைய யோசேப்புக்கு வெண்மையான பற்களும் நீளவாக்கான கண்களும் சிறப்பைக் கூட்டின. இவ்வளவு லட்சணத்துக்கும் திருஷ்டி பரிகாரம்போல் தலை வழுக்கை விழுந்திருக்கும். அவ்வழுக்கைதான் அவன் வயதைப் பறைசாற்றிக் கொண்டிருக்கும்.

யோசேப்பு செய்திருந்த அலங்காரத்தைப் பார்த்த நண்பன் சாமுவேல் கேலி பண்ணினான். "என்னப்பா! புது மாப்பிள்ளையாட்டம், பேண்டும் கோட்டும் டையுமாய் உலவுகிறாய், ஏதாவது விசேஷம் உண்டா?" விஷயம் ஒன்றும் தெரியாதவன் போல் கேலியாகக் கேட்டான் அவன்.

அதற்குள் கோயில் குட்டி யோவான் வந்து, "அண்ணே, விஷயம் தெரியாதா, உங்களுக்கு? நாளைக்கு யோசேப்பு அண்ணனுக்குக் கல்யாணம். அந்தச் சந்தோஷத்திலேதான், கோயிலிலே தொங்குதே அலங்கார விளக்குகள் யாவற்றையும் சன்மானமாகக் கொடுத்திருக்கிறார்கள்" என்றான்.

"ஏ! யோவான்! துரை நேற்றுத்தான் கொழும்பிலிருந்து வந்தாலும் அவனுக்குத் நான் எல்லா விஷயமும் கடிதாசில் எழுதியிருந்தேனே" என்று யோசேப்பு மகிழ்ச்சியாக மொழிந்தான்.

## மங்களம் காசிராஜன்

''கடிதாக எழுதினால் அதில் எழுதியபடி எல்லாம் நடக்க வேண்டுமென்று இருக்கிறதா? எலிஸபெத்தை நினைத்து உருகும் போது பக்கத்திலேயிருந்து ஆறுதல் சொன்னவன். எனக்குத்தான் நடப்பெல்லாம் தெரியும். நல்லவள் ஒருத்திக்காக உண்மையாக இருக்க விரும்பினால், நீ கல்யாணமே செய்துகொள்ளக் கூடாது என்பேன்'' என்று சாமுவேல் அடித்துக் கூறினான்.

'' எனக்காகச் செய்ய வில்லையடா, வேதாந்தி. என் பிள்ளைகள் ஏழு பேரையும் யாருடா கவனிப்பார்கள்?'' என்று கேட்டான் யோசேப்பு.

'' பிள்ளைகள்தான் ஒரு வருஷமா சித்திகிட்டே திருச்சியில் இருக்கிறதே! உனக்கென்ன பாரம்? சும்மா ராஜாவாட்டம் வேண்டிய ரூபாயை மட்டும் அனுப்பிவிட்டு இருக்காமல், இன்னும் ஒரு கால் கட்டுப் போடப் போறானும்.''

''சாமுவேல் அண்ணா, நாளைக்கு இவ்வளவு நேரத்துக்குத் திருமணம் முடிந்து பெண்ணும் இவங்க வீட்டுக்கு வந்து விடுவாள். இப்போ போட்டு உபதேசம் பண்ணுகிறீர்களே. சட்டெனக் காரியம் நடக்கட்டும்'' எனக் கோயில் குட்டி ஒத்து ஊதினான்.

ராத்திரி ஜெபத்துக்கு மணி அடிக்கவே பேச்சை விட்டு, பைபிளுடன் கோயிலுக்குள் நுழைந்தனர்.

இரவெல்லாம் யோசேப்பு தூங்கவே இல்லை. வீட்டிலுள்ள சாமான்களை யெல்லாம் ஒழுங்குபடுத்தினான். திருமணத்துக்காக வீட்டைத் தேடி வருபவர்களுக்குக் கொடுப்பதற்காகப் பரிசுப் பொட்டலங்களைக் கட்டுவதில் முனைந்திருந்தான் யோசேப்பு.

யோசேப்புவின் ஊர் கச்சனூரிலே. அவ்வூர் ஸ்டேஷனைத் தாண்டினால் ஸ்டெல்லா ஊர் வந்து விடும். இரு ஊர்களுக்கும் இடையில் கூப்பிடு தூரம்தான்.

பெண்டு வாத்தியம், மாப்பிள்ளைத் தோழன், வேட்டு, வாகனம் போன்ற கல்யாண அகராதிகள் இல்லாமல் எளிமையாகக் சூட்டு மட்டும் போட்டுக் கொண்டு நடந்தே போனான் யோசேப்பு.

வழக்கத்துக்கு மாறாகச் சூட்டு அணிந்தது ஏதோ உடம்பை அழுத்துகிறதுபோலிருந்தது. காலைக் குறைக்கக் கால்களை இறுக்கும் சாக்ஸும், புது ஷூவுமாக நடையை மட்டுப் படுத்தியது. சகாக்களின் பகடி வேறு.

பரிபோவான் ஆலயமும் திருமண அலங்காரத்தில் புனிதப் பொலிவோடு தோற்றம் அளித்தது. இவன் போவதற்குள் பிஷப்கூட வந்து விட்டார்.

எளிமையாக மாப்பிள்ளையும், பெண்ணும் ஏனையோரும் ஆலயத்துக்கு நடந்தே வந்திருந்தனர். ஸ்டெல்லாவைப் பார்த்தவுடன் யோசேப்பு மனம் சங்கடப்பட்டது. 'திருமணம் என்று நாம் டிப்டாப்பாக வர இவள் மட்டும் சந்நியாசினி மாதிரி வெள்ளைப் புடவையும், பூவில்லாத கூந்தலுமாக வேதப் புத்தகத்துடன் வந்திருக்கிறாளே' என்று பலவாறு தனக்குள் எண்ணிக் கொண்டான்.

எம். ஏ. படித்த பெண்ணுக்கும் மூன் றாண்டுகளே பள்ளியை மிதித்திருந்த யோசேப்புக்கும் மணம் என்றவுடன் அவ்வூரில் வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் எனப் பாகுபாடு இல்லாமல் கோயிலில் கூடியிருந்தனர். படித்த பெண்; படிக்காத மாப்பிள்ளை. ஏழு பிள்ளைகளுக்குத் தந்தை. பொருந்தா மற்ற திருமணம். அதனால் மக்கள் கூட்டத்துக்குக் குறைவில்லை.

ஸ்டெல்லா வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் சிலர் அருவையுடன் நோக்கினர். மாப்பிள்ளை யோசேப் புக்கோ வாயெல்லாம் பல்லாக இருந்தது.

பிஷப் வந்ததும் இருவரும் கரம் குவித்து வணங்கினர். கல்யாணத்துக்குரிய கேள்விகள் கேட்க ஆரம்பமாகு முன்னாலே ஸ்டெல்லா முத்தான எழுத்துக்களாலான பத்திரம் ஒன்றைப் பிஷப்பிடம் சமர்ப்பித்தாள்.

பிஷப் அதைத் தம் மனத்துக்குள்ளேயே வாசித்துவிட்டுக் கண்ணீர் ததும்ப ஜனத் திரளுக்கு முன்பாக மற்றொரு முறை வாசிக்க ஆரம்பித்தார்.

> ''மாண்பு மிக்க பரிசுத்த யோவான் ஆலயத்தில் எழுந்தருளியுள்ள திரு பால் பிஷப் அவர்களின் முன்பாகவும், கோயில் முழுதும் நிரம்பியுள்ள ஜனங்கள் முன்பாகவும் இடையன்விளை தேவராஜன் மகள் ஸ்டெல்லா மேரி அறிவித்துக் கொள்ளும் விண்ணப்பமாவது: என் உடன் பிறந்த சகோதரி எலிஸபெத் இறைவன் திருப் பாதத்தை அடைந்து விட்டதால், அவள் பெற்றுவளர்த்த பிள்ளைகள் ஜெயசீலி, குணசீலி, தர்மசீலி, கனி பாபு, ராஜு பாபு, செல்ல பாபு, நேச பாபு — என் கண்காணிப்பில் இறைவனால் விடப்பட்டார்கள். இவர்களுக்கு என் ஆயுள் பரியந்தம் தாயாக இருந்து, என்னுடன் அவர்களை வைத்துப் பராமரித்து, அவர்களுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் சரிவர ஆற்றுவேன் என்று உறுதி கூறுகிறேன். பிள்ளைகள் யாவருக்கும் என்னுடன் இருப்பதில் பூரண சம்மதம்.
>
> என் உபாத்தியைத் தொழிலில் உள்ளது போக, பிள்ளைகளின் தந்தையாகிய கச்சனூரிலே யோசேப்புவின் சொத்தாகிய ஓர் ஏக்கர் நன்செய்யையும், வீட்டையும் பயன்படுத்திக் கொள்ளுவேன். சொத்துக்கள் யாவும் அவரால் என் பெயருக்கு மாற்றப்பட்டவையோயாகும்.
>
> ஆனால் அவருக்கு மனைவியாக இருக்க முடியாது என்பதைத் திட்டவட்டமாக விசனத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.
>
> இப்படிக்கு
> திருச்சபைக்குக் கட்டுப்பட்ட
> ஸ்டெல்லா மேரி, எம். ஏ.''

பிஷப் வாசித்து முடித்தவுடன் அருவையுடன் நோக்கிய கண்கள் யாவும் அவளைப் பெருமையாக ஆசையுடன் நோக்கின.

அவள் இட்டமெல்லாம் முன்பே தெரிந்த அவள் தந்தை, மாப்பிள்ளை யோசேப்பைக் கைத்தாங்கலாகப் பிஷப்பிடம் அழைத்துப் போனார்!

# உள்ளம் கவரும் சுகந்தமுள்ள உன்னத டால்க்

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகித்து நாள் முழுவதும் நீடிக்கும் குளுமையையும், மனோ உல்லாசத்தையும் பெறுங்கள்




ஸ்நானத்திற்குப் பின் அனுபவமாகும் புத்துணர்ச்சி நீடித்து நிற்க, நாள் முழுவதும் நறுமணத்துடன் திகழ, பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள். இதமான வாசனையுள்ள இந்த டால்கம் பவுடர் வியர்வையை விரைவில் உறிஞ்சி, எல்லாக் காலநிலைகளிலும், உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும் மனோ உல்லாசத்துடனும் வைக்கும். பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் குடும்பத்தினர் அனைவருக்கும் ஏற்றது.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(கரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

JWT-P-1594

# வெற்றித் திருநகர்

அகிலன்

## அத்தியாயம் பன்னிரண்டு

## வெற்றியின் துயரம்!

விசுவநாதன் சந்திர சேகரபாண்டியரிடம் அவரால் ஆட்சியை ஏற்று நடத்த முடியுமா என்று கேட்டாரல்லவா? அதைக் கேட்டதும், ''முடியாது! என்னால் தனியாக இதை ஆட்சி செய்ய முடியாது!'' என்று உண்மையை ஒப்புக் கொண்டார் பாண்டியர்.

''பிறகு?''

''நீங்கள்தான் இதற்கு ஒரு வழி செய்ய வேண்டும். நான் முதன் முதலில் விஜய நகரத்தை நோக்கி வந்தபோது, நடுவழியில் முதலில் உங்களைத்தான் சந்தித்தேன். நீங்கள் உங்கள் விரலில் அணிந்திருந்த வராகச் சின்னத்தை அப்போது காண்பித்தீர்கள். அதே மோதிரத்தைத்தான் இப்போதும் அணிந்து கொண்டிருக்கிறீர்கள். அப்போதே எனக்கு ஒரு பெரிய நம்பிக்கையை அந்த மோதிரம் கொடுத்து விட்டது. இப்போதும் நான் அதையே நம்புகிறேன். நீங்களே இந்த நாட்டுக்கு ஒரு நல்வழி காட்டுங்கள்.''

''வழிகாட்டி முடிவு கூற வேண்டியவர் விஜயநகரத்தில் இருக்கிறார். நான் அவருடைய ஊழியன்'' என்றான் விசுவநாதன்.

''ஒரு யோசனை...'' என்று தயங்கிய படியே கூறினார் சந்திரசேகர பாண்டியர்.

''என்ன?''

பாண்டியருக்குத் தொண்டையை அடைத்தது. ஒரு விநாடி பேச முடியாமல் தடுமாறி விட்டு, ''நீங்கள்... நீங்கள் விரும்பினால்... நீங்களே நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்துங்கள்'' என்றார். ''இதை நான் முழு மனத்தோடு கூறுகிறேன். எப்படியாவது இந்த நாட்டுக் குடிமக்கள் நன்றாக வாழ்ந்தால் போதும். இந்த ஆலோசனையை நான் சக்கரவர்த்திகளிடமே கூறி, அவர்களை ஏற்கச் செய்கிறேன்.''

கலகலவென்று நகைத்தான் விசுவநாதன்.

''இல்லை! நான் இதை ஆலவாய்அண்ணல் மீது ஆணையாகச் சொல்கிறேன். ஆலோசித்துத்தான் பேசுகிறேன். நான் வாரிசில்லாதவன்; முதுமைப் பருவத்தில் உள்ளவன். அதனால்தான் கூறுகிறேன்!''

''என் தந்தையார் கூறியது போலவே தாங்களும் கூறுகிறீர்கள்!'' என்று கூறி மேலும் நகைத்தான் அவன். ''அவர்களும் எனக்காகவே நாட்டை உங்களிடமிருந்து கைப்பற்றினார்களாம்; நீங்களோ என்னிடமே இதைக் கொடுத்துவிடுகிறேன் என்கிறீர்கள். பாண்டியர் அவர்களே! என்னிடம் இப்படியெல்லாம் கூறி என்னை இழிவுபடுத்த வேண்டாம்!''

பாண்டியர் கண் கலங்கி விட்டார். அவனுடைய தந்தையாரோடும் அவர் பழகியிருந்தார். அவனோடும் பழகுகிறார். இந்த இருவருக்கும் இடையில் இப்படி ஒரு வேறுபாடா! குணம் என்னும் குன்றின் உச்சியின் மீதேறி விசுவநாதன் நின்றுகொண்டிருப்பது போல் அவருக்குத் தோன்றியது.

''விஜயநகரம் எப்படிச் சக்கரவர்த்திகளால் புத்தொளி பெற்றதோ, அப்படியே பாண்டிய நாடும் உங்களால் ஒளிபெறும் என்று நான் நம்புகிறேன். எப்படியாவது என்னுடைய நம்பிக்கையை நீங்கள் சிதற அடித்து விடக் கூடாது'' என்றார் பாண்டியர்.

''சக்கரவர்த்திகளின் ஆணைப்படி நாம் நடப்போம்'' என்றான் விசுவநாதன்.

அன்று மாலை நாகம நாயக்கரின் மாளிகையில் அவரைச் சென்று பார்த்தான். விழுப்புண் முழுவதும் ஆறி, அங்கு இப்போது ஒரு பெரிய தழும்பு தென்பட்டது.

''நாம் விஜயநகரத்துக்கு நாளைக்குப் புறப்படுகிறோம்'' என்றான்.

நாகம நாயக்கரின் முகம் வெளுத்தது.

''இனி நான் இங்கு உயிர் உள்ளவரை சக்கரவர்த்திகளின் முகத்தில் விழிக்க மாட்டேன்'' என்றார் அவர்.

''தங்களைச் சிறையிட்டு அழைத்து வரும்படி எனக்கு ஆணையிட்டிருக்கிறார்கள்'' என்றான் விசுவநாதன்.

ஃ ஃ ஃ

பாண்டிய நாட்டில் விசுவநாதன் பெற்ற வெற்றி சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயருக்குத் தெரிவதற்கு முன்பாக அமைச்சர் சாளுவ மன்னருக்கு எட்டிவிட்டது. சேர நாட்டு உதயமார்த்தாண்டனையும் தடுத்து விட்டு, நாகம நாயக்கரைக் களத்தில் முறியடித்துவிட்டான் விசுவநாதன் என்பதை, ராமபத்திர நாயக்கர் உடனடியாக அமைச்சருக்குச் சொல்லி அனுப்பியிருந்தார்.

செய்தியைக் கேட்டவுடனேயே, ''நாகம நாயக்கரின் தோல்வியல்ல; என் தோல்வி!'' என்று கூறிக் கொண்டார் அமைச்சர்.

லட்சுமியிடம் அவர் இதை உடனே வாய் விட்டுச் சொல்லவில்லையென்றாலும், அவர் பெற்றிருந்த அதிர்ச்சியிலிருந்து அவள் ஒருவாறு ஊகித்துக் கொண்டாள். வழக்கமாகவே நெஞ்சுறுதியோடும் அமைதியோடும் எதையும் தாங்கிக் கொள்ளும் இயல்பு

கொண்ட சாளுவ நரசிம்மர் [illegible] திடீரென்று அமைதி இழந்த நிலையில் காணப்பட்டார். காவலர்கள், பணியாட்கள், குடும்பத்தில் உள்ளவர்கள் யாவரிடமுமே சீறி விழுந்தார். லட்சுமிக்கே அவரிடம் ஏற்பட்டிருந்த இந்த மனமாற்றம் வேதனையைத் தந்தது.

லட்சுமி மெல்ல அவரிடம் ஒரு நாள் பேச்சுக் கொடுத்தாள். தனிமையில் ஏகாந்தத்தோடு அவர் சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் போது அவர் அருகே சென்று மௌனமாக அமர்ந்தாள். கண் கலங்க அவரை உற்றுப் பார்த்தாள்.

"என்ன லட்சுமி ?"

"அப்பா ! உங்களுடைய துன்பத்துக்குக் காரணம் என்னவென்று நான் அறிந்து கொள்ளக் கூடாதா? முன்பெல்லாம் அரண்மனையில் நடைபெறும் நிகழ்ச்சிகள் பற்றி என்னிடம் கூறுவீர்கள். இப்போது என்னிடம் நீங்கள் முகம் கொடுத்துப் பேசுவதுகூட இல்லை. அப்படி என்ன நேர்ந்து விட்டது? நான் என்ன தவறு செய்து விட்டேன்?"

லட்சுமியின் குரலில் இழையோடிய துயரம் சாளுவ நரசிம்மரின் நெஞ்சைத் தொட்டது. அவருக்குமே தமது மனத்திலிருக்கும் சுமையை வெளியில் இறக்கினால் தான் ஓரளவு ஆறுதல் கிடைக்கும் என்று தோன்றியது.

"என்னையும் மீறி நீ அன்றைக்கு விசுவநாதனுக்கு வெற்றித் திலகமிட்டு அனுப்பினாயல்லவா? உன் எண்ணப்படியே அவன் வெற்றி பெற்று விட்டான். உன்னுடைய அப்பாவின் மனக் கோட்டைகள், ஆசைகள், கனவுகள் எல்லாவற்றையுமே சிதற அடித்து விட்டு அவன் வெற்றி பெற்று விட்டான். நாகமரின் தோல்வி என் தோல்வி. நேற்றுப் பிறந்த பிள்ளையிடம் அவர் தோல்வியடைந்து இப்போது சிறைப்பட்டிருக்கிறார். சிறையில் அவர் இருந்தால் என்ன? நான் இருந்தால் என்ன?"

எல்லையற்ற மகிழ்ச்சி ஒருபுறமும் எல்லையற்ற துயரம் மறுபுறமும் இரண்டு பேரலைகளாக எழும்பி லட்சுமியின் உள்ளத்தில் மோதிக் கொண்டன.

"இருவரில் யாருக்குத் தோல்வி ஏற்பட்டிருந்தாலும் இப்படித்தான் நாம் வருந்துவோம். இளவர் சிறைப்பட்டிருந்தாலுமே நீங்கள் மகிழ்ச்சியடைந்திருக்க மாட்டீர்கள்!"

சாளுவ நரசிம்மர், தமது குமாரத்தியின் முகத்தை உற்று நோக்கினார். விசுவநாதனிடம் அவள் கொண்டிருந்த ஆழ்ந்த அன்பை அவர் புரிந்து கொண்டு விட்டது அவருக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அதனால் ஏற்படவிருக்கும் கேடுகளை அவர் அவளிடம் விவரிக்கத் தொடங்கினார்.

"விசுவநாதன் தோல்வியடைந்திருந்தானோ, அவனுக்குப் பாண்டிய நாடே பரிசாகக் கிடைத்திருக்கும். அவனுடைய தோல்விக்குரிய தண்டனையாக நானே உன்னை அவனுக்கு மணம் செய்து கொடுக்க முன்வந்திருப்பேன். இப்போது, என்னையும் அவன் அப்பாவையும் பகைத்துக் கொண்டதால் அவனே அவனுடைய வாய்ப்புக்களை இழந்து விட்டான்."

"அப்பா!" என்று கூவினாள் லட்சுமி; "வாய்ப்புக்களை அவர் இழந்து விட்டார் என்று கூறுகிறீர்கள், அப்பா! என்னால் இதைத் தாங்கவே முடியாது!"

லட்சுமி கலகலத்துப் போய் விட்டாள். சாளுவ நரசிம்மருக்கே அவள் துடித்த துடிப்பைத் தாங்க முடியவில்லை.

"லட்சுமி ! வெற்றி வீரனாகத் திரும்பப் போகும் உன் விசுவநாதனுக்கு இங்கே சக்கரவர்த்திகள் என்ன பரிசு கொடுப்பார்கள், தெரியுமா ? நாகமருடைய அதிகாரம், நாடு இவற்றையெல்லாம் பிடுங்கி அவனிடம் கொடுப்பார்கள். இந்த சாம்ராஜ்யத்தின் தளநிகாரியாக விளங்கிய அவரைச் சிறையிலடைத்து அப்பாஜியைப் போல் நடத்துவார்கள்; அல்லது சிரச்சேதம் செய்வார்கள். நாகமநாயக்கருக்கு இப்படியெல்லாம் நேர்ந்த பிறகு நான் இங்கு அமைச்சராக இருப்பேனென்று நீ நினைக்கிறாயா? தந்தையை வென்றுவிட்டோ, கொன்று விட்டோ; அவன் இங்கு சக்கரவர்த்திகளின் ஆதரவில் பெரிய மனிதனாக உலவலாம். ஆனால் நான் அப்படிச் செய்ய மாட்டேன். அவருக்கு ஏற்படும் இன்ப துன்பங்களில் எனக்கும் பங்கு உண்டு. அவர் என் ஆலோசனைப்படி தான் நடந்திருக்கிறார்."

அந்த மாளிகையே இடிந்து அவள் தலையில் விழுந்து சிதறுவது போல் தோன்றியது லட்சுமிக்கு.

"அப்பா ! இதற்கு வேறு ஏதும் வழியில்லையா ? எப்படியாவது சக்கரவர்த்திகளிடம் மன்னிப்புக் கேட்டு மாமாவைத் தண்டனையிலிருந்து தப்புவிக்க முடியாதா?"

"நான் மன்னிப்புக் கேட்க மாட்டேன்!" என்று ஆத்திரத்தோடு கூறினார் சாளுவ நரசிம்மர். "எது நடக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேனோ, நான் திட்டமிடுகிறேனோ, அது நடந்தே ஆகவேண்டும். அதை என்னால் நடத்திக் காட்ட முடியும்."

விஜயநகரத்தின் ஆதிக்கத்துக்கு உட்படாத ஒரு தனியான சாம்ராஜ்யத்தைத் தம்மால் ஏற்படுத்த முடியும் என்று அவர் கூறினார். சோழ நாட்டின் பகுதிகளுக்கு அப்போதே அவர் சிற்றரசராக இருந்தவர். தஞ்சையில் அவருக்கென்று தனியாக ஓர் அரண்மனை அப்போது இருந்தது. அவருடைய அதிகாரிகள்தாம் அங்கு ஆட்சிப் பொறுப்பைக் கவனித்து வந்தார்கள். விசுவநாதன் மட்டிலும் அவர் சொல்கேட்டு நடந்திருந்தால், சோழ பாண்டிய மண்டலங்களுக்கே அவன் தனிப் பெரும் தலைவனாக விளங்கியிருக்க முடியும் என்றார்.

"லட்சுமி! இப்போது என் எல்லாக் கனவுகளுமே சிதறி விட்டன. நானே சக்கரவர்த்திகளிடம் சென்று என்னை அமைச்சர் பதவியிலிருந்து விடுவிக்குமாறு கேட்டுக் கொள்ளப் போகிறேன். இனி என்னால் இங்கு இருக்க முடியாது. சிறைக்குள் நாகமர் இருக்க, நான் அரண்மனைக்குள் அமைச்சராக உலவ

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம் அடையுங்கள்
—ரண சிகிச்சையையும்
தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா! தாங்க முடியாத அரிப்பா! எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா! ரத்தக் கசிவா! உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதியாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங்களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவாரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தியைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்பதோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக்கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்கு காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

## தி டாலர் கம்பெனி

337, தம்பு செட்டி தெரு
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம்
கிடைக்கும்.

83-DOL-3 A TM



# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | 18-00 | 9-00 |
| பர்மா, மலேயா, இதர நாடுகள் | 25-00 | 12-50 |

தனிப் பிரதி விலை 35 காசு

சந்தா தொகை முன்னதாக அனுப்பப் பட வேண்டும். வி. பி. பி. கிடையாது

மானேஜர் :
கல்கி காரியாலயம் - சென்னை-10



# கந்தன் கருணை

திருமுருக
கிருபானந்த வாரியார் அவர்கள் 'கல்கி'யில் எழுதி வந்த கட்டுரைகள் இப்போது நூல் வடிவில் வெளிவந்துள்ளது.

தனிப் பிரதி விலை ரூ. 3.50

வியாபாரிகளுக்கு தக்க கமிஷன் உண்டு

விவரங்களுக்கு :

## சுவாமி பதிப்பகம்

16A/2, கோபாலபுரம்
இரண்டாவது தெரு, சென்னை-6




# பார்கோ

கேஸ் மான்டில்கள்



சிறந்த ஒளிக்கும்
நீடித்த சேவைக்கும்

தயாரிப்பாளர்கள் :

பார்கோ மான்டில் ப்ராடக்ட்ஸ்
848-B. கோட்பந்தர் ரோடு.
பாந்த்ரா-பம்பாய்-50 AS.



# ஆல்போ-ஸாங்

எல்லா வயதினருக்கும்
ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இளையோர் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.






ஜே. அன் ஜே. டிஷேன்
ஹைதராபாத் (டெக்கான்)

முடியாது. அப்படி நடக்குமானால் நாம் எல்லோருமே குடும்பத்தோடு சோழநாட்டுக்குப் புறப்படப் போகிறோம். தஞ்சை நகரத்திலேயே தங்கி விடலாமென்று முடிவு செய்திருக்கிறேன்.''

ஒவ்வொரு நாளும் விசுவநாதன் வெற்றியோடு திரும்ப வேண்டுமென்று இறைவனை வேண்டிக் கொண்ட லட்சுமி, அந்த வெற்றிக்குப் பின்னே இவ்வளவு துன்பங்கள் நேரக் கூடும் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை. 'நாகம நாயக்கருக்குச் சிறைச்சாலையோ சிரச்சேதமோ தரக் கூடிய வெற்றியா இது? விஜயநகரத்தை விட்டே எங்கள் குடும்பத்தைத் தஞ்சைக்கு விரட்டக் கூடிய வெற்றியா இது? அவரையும் என்னையுமே நிரந்தரமாகப் பிரிக்கத் துடிக்கும் வெற்றியா இது?' — இத்தகைய ஒரு வெற்றி விசுவநாதனுக்குக் கிடைக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டதற்காகத் தன்னைத் தானே அப்போது நொந்து கொண்டாள் லட்சுமி.

அரண்மனையிலிருந்து அதிகாரி ஒருவர் அவசரச் செய்தியோடு அமைச்சரைக் காண வந்து சேர்ந்தார். சக்கரவர்த்தி அனுப்பி வைத்திருந்த அதிகாரி அவர்.

''வெற்றியோடு விசுவநாதன் திரும்பி வருவதாக நமக்குச் செய்தி வந்திருக்கிறது. சக்கரவர்த்திகள் செய்தி கேட்டு மிகவும் ஆனந்தம் கொண்டிருக்கிறார்கள். விசுவநாதனை வரவேற்று ஒரு பெரிய வெற்றி விழாவே கொண்டாடவேண்டுமென்கிறார்கள். அதற்கு ஏற்பாடுகள் செய்வது குறித்துத் தங்களிடம் பேச வேண்டுமாம். உடனடியாக அழைத்து வருமாறு பணித்தார்கள்'' என்றார் அந்த அதிகாரி.

''நாகமநாயக்கர்?'' என்று கேட்டார் அமைச்சர்.

''அவர்களையும் சிறைப்படுத்தி அழைத்து வருவதாகச் செய்தி அனுப்பியிருக்கிறார்.''

சாளுவ நரசிம்மர் மௌனமாக எழுந்தார். அவருடைய முக மாறுதல்களைக் கவனித்த லட்சுமியால் எதுவுமே புரிந்து கொள்ள முடியவில்லை. குமுறும் வேதனைகளை உள்ளே அடக்கிக் கொண்டு அவர் அரண்மனைக்குப் புறப்படுகிறார் என்பதை மட்டிலும் லட்சுமி கண்டு கொண்டாள்.

## அத்தியாயம் பதின்மூன்று

# வரவேற்பு விழா

**அ**ரண்மனைப் பூங்காவில் கிருஷ்ணதேவராயர் உலவிக் கொண்டிருந்த தோற்றத்தைத் தொலைவில் பார்த்தபோதே சாளுவ நரசிம்மருக்குத் தூக்கிவாரிப் போட்டது. முன்பொரு நாள் குதிரையிலிருந்து விழுந்து விபத்துக்குள்ளான தினத்திலிருந்து அவர் பூங்காவுக்குள் நுழைவதில்லை. எவ்வளவு தான் அவர் தமது உடல் நலிவை மறைக்க முயன்றாலும் அவரால் வழக்கம்போல் நடமாட முடிந்ததில்லை. அரண்மனைக் கூடங்களுக்குள் நடந்து செல்வதற்கே அவருக்குத் துணை தேவையாக இருந்தது. அப்படிப்பட்டவர் அன்று மெல்ல அங்கே உலவிக் கொண்டிருந்தார். திடீரென்று உடல் வலிமையைத் திரும்பப் பெற்று விட்டாரா சக்கரவர்த்தி?

''வாருங்கள், அமைச்சரே, வாருங்கள்!'' என்று உற்சாகத்தோடு சாளுவநரசிம்மரை வரவேற்றுவிட்டு, அருகிலிருந்த ஆசனத்தில் அமர்ந்தார் கிருஷ்ணதேவராயர். கல்லால் செதுக்கப்பட்ட நீர்த் தாரைகளின் வழியே தண்ணீர் வழிந்தோடிச் செடி கொடிகளுக்குப் பாய்ந்து கொண்டிருந்தது. மலர்கள், பூஞ்செடிகள், இனிமையான காற்று நிறைந்த தோட்டத்தின் திறந்தவெளி ஆசனத்தில் அவர் அமர்ந்து கொண்டு, அமைச்சருக்கும் ஓர் இருக்கையைச் சுட்டிக் காட்டினார்.

''விழா ஏற்பாடுகளைக் கவனிக்க வேண்டிய முழுப் பொறுப்பும் உங்களுடையதுதான்! நம்முடைய விசுவநாதனுக்கு மட்டும் நடைபெறும் வரவேற்பாக இது இருக்கக் கூடாது. நம்முடைய சாம்ராஜ்யத்திலுள்ள இளைஞர்கள் எல்லோருமே இதைத் தங்களுக்கு நடைபெறும் திருவிழாவென்று நினைக்க வேண்டும். நேர்மைத் துணிவு, வீரம், தியாக உணர்ச்சி கொண்ட ஒவ்வொரு வீரனும் இங்கே போற்றப்படுவான் என்பதை நாம் இந்த விழாவின் வாயிலாக வெளிப்படுத்த வேண்டும். நம்முடைய சாம்ராஜ்யத்துக்கென்று ஒரு லட்சியம் இருக்கிறது என்பதை உணர்ந்து, அதற்காகத் தன் தந்தையோடு போரிட்டுத் திரும்பியிருக்கிறான் விசுவநாதன். இந்த லட்சியத்தை நம் இளைஞர்களிடம் பரப்புகிற வகையில் இதை மிகச் சிறப்பாகச் செய்து விடுவோம்!''

சாளுவநரசிம்மரின் மனப் போக்கைச் சிறிதும் கவனியாமல் கிருஷ்ணதேவராயர் மிகவும் உற்சாகமாகப் பேசிக் கொண்டு போனார். எப்படியெல்லாம் விழா நடைபெற வேண்டுமென்பதை விளக்கினார். தமது அரண்மனைக்குள் உள்ள வெற்றி மண்டபத்தில் அது நடைபெற வேண்டுமென்றும், அப்போது தாமே அவனுக்கு உடைவாள் வழங்கப் போவதாகவும் கூறினார்.

சாளுவ நரசிம்மர் தம்முடைய உணர்ச்சிகளை ஒரு சிறிதும் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. விசுவநாதனுக்கு எவ்வளவு சிறப்பாக விழா நடைபெறப் போகிறது என்பது பற்றி அவருக்குக் கவலை இல்லை. விசுவநாதனின் தந்தையான நாகமநாயக்கருக்கு என்ன தண்டனை கிடைக்கப் போகிறது என்பது தான் அவரது ஒரே கவலை.

சக்கரவர்த்தியின் ஆணை என்பதால் வெற்றி விழா ஏற்பாடுகளைச் சக்கரவர்த்தியின் விருப்பப்படியே செய்து முடித்தார்



''ஹலோ சரோஜா பேசறது?''

''எதுக்கு இப்படி வள்ளுன்னு விழுந்து அடிக்கறேள். நான் என்ன பண்ணிட்டேன்?''

''இன்னும் என்ன பண்ணணும்? காலமே காரை எடுத்துண்டு வெளியே போனியா இல்லையோ? அதுவே போதாதா?''

---

அமைச்சர். நகரமெங்கும் அலங்கரிக்கப் பெற்றது. வாழை, கரும்பு முதலியவை தெருவுக்குத் தெரு அழகு செய்தன.

நகரத்தின் எல்லைக்கு விசுவநாதன் வந்து விட்டதாகச் செய்தி கேட்டு, நகரம் முழுவதுமே அவனை வரவேற்பதற்காக வெளிக் கோட்டை மதிலுக்கு முன்னே திரண்டது. படை வீரர்கள், பல்லிசை முழங்குவோர், ஆடி கூறும் ஆண்ரோர் முதலியவர்களை அனுப்பி வைத்திருந்தார் சக்கரவர்த்தி.

குடும்பத்தோடு செல்ல விரும்பிய அமர நாயக்கர்களுக்கும் தனியே இடங்கள் ஒதுக்கப் பெற்றிருந்தன. சிவிகைகளில் பெண்கள் வெளிக் கோட்டை வாயிலை நோக்கிச் சென்ற வண்ணமாக இருந்தனர். சக்கரவர்த்தி மட்டும் அரண்மனையில் தங்கிக் கொண்டு, ராமராயர், அச்சுதராயர், அமைச்சர் முதலியோரை வரவேற்புக்காக அனுப்பி வைத்தார். அரண்மனைப் பெண்டிரின் சிவிகைகளும் மென் துகில் காற்றில் அசைந்தாட வெளி வாயிலை நோக்கி விரைந்தன.

நகரமெங்கும் குதூகலத்தில் திளைத்துக் கொண்டிருந்தது. ஆனால் கமலாதேவி மட்டிலும் தம்முடைய மாளிகையை விட்டு வெளியில் வருவதற்கு மறுத்து விட்டார். மாளிகையைச் சேர்ந்த பணிப்பெண்கள் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டனர்.

சாளுவ நரசிம்மருக்கு அது கட்டளை. அதை மறுத்துக் கூற முடியாமல் அவர் தம்மைச் சித்தப்படுத்திக் கொண்டிருந்தார். அவரது மாளிகையின் வாசலில் அவரது குதிரை அலங்கரிக்கப் பெற்று நின்று கொண்டிருந்தது.

லட்சுமி பொழுது புலர்வதற்கு முன்பிருந்தே இதே நிலையாக இருந்தாள். பல முறை திரும்பத் திரும்பத் தன்னை அவள் அழகு செய்து கொண்டாள். எதிலும் அவளுக்குத் திருப்தி ஏற்படவில்லை. புறப்படும் போது எப்படியும் தன்னைத் தந்தையார் அழைத்துச் செல்வார் என்றே அவள் நம்பினாள். அவர் குதிரையில் சென்றாலும் அவள் தனியே சிவிகையில் செல்லலாம். அவளுடைய தோழிகளில் பலர் அவளுக்கு முன்பே புறப்பட்டு விட்டார்கள்.

நெடு நேரம் தன் தந்தையிடமிருந்து அழைப்பு வரும் என்று காத்திருந்த லட்சுமி, கடைசியில் அவர் தன்னைத் திரும்பிப் பாராமலே புறப்படுவது கண்டு திகைப்படைந்தாள். அவரைப் பின்பற்றி வாசல் வரையில் ஓடி வந்து, ''அப்பா!'' என்று அழைத்தாள்.

சட்டென்று நின்றார் சாளுவ நரசிம்மர். அவளை ஏறிட்டுப் பார்த்தார். அவர் கண்கள் சிவந்திருந்தன.

''தோழிகளோடு நானும்......''

''உலகம் முழுவதுமே அங்கு திரண்டு வந்தாலும் சரி. அங்கு நீ மட்டிலும் வரக் கூடாது. ஆணையிடும் அதிகாரம் இருப்பதால் சக்கரவர்த்திகள் இவ்வளவையும் செய்திருக்கிறார்கள். என் விருப்பத்துக்கு மாறாக நான் அவர்கள் கூறியபடியெல்லாம் செய்திருக்கிறேன். நானே என் விருப்பத்துக்கு மாறாகத் தான் போகிறேன். ஆனால் எனக்கென்று ஒரு விருப்பம் இருக்கிறதல்லவா?''

''அப்பா!'' — கதறி அழுதாள் லட்சுமி.

''ஆமாம்; எனக்கென்று தனியே ஒரு விருப்பம் இருக்கிறது. அதை நீதான் நிறைவேற்ற வேண்டும். நீ இந்த வரவேற்பில் கலந்து கொள்ளக் கூடாது!''

மிடுக்கோடு குதிரையில் தாவி ஏறினார் சாளுவ நரசிம்மர். லட்சுமி அதே இடத்தில் சரிந்து விழுந்து விட்டாள். கூட்டம் கூட்டமாகக் குதிரைகளில் செல்வோரும், சிவிகைகளில் செல்வோரும், நடந்து செல்வோரும் அவளைக் கிழே தள்ளி மிதித்துக் கொண்டு செல்வது போலவே அவளுக்குத் தோன்றியது.

நெடுநேரம் நினைவிழந்து கிடந்தாள் அவள். பிறகு கூட்டம் திரும்பி வரும் ஓசை எழுந்தது. பல வகை இன்னிசைக் கருவிகள் முழங்கின. மக்களின் வாழ்த்தொலி விண்ணையே அதிரச் செய்தது.

''வெற்றி வீரன் விசுவநாதன் வாழ்க!''

''விஜயநகரத்து வீர இளைஞன் வாழ்க!''

லட்சுமி பரபரப்போடு மேல்மாடத்துக்கு விரைந்தோடினாள். நகரமெங்கும் ஒரே மக்கள் வெள்ளம். தொலைதூரத்தில், குதிரைகளில் ஒரு சிலர் மட்டும் மையத்தில் வருவது தெரிந்தது. விசுவநாதன் அவர்களில் ஒருவனாகத்தான் இருக்க வேண்டும். அவனை இனங்காணத் துடித்தாள் லட்சுமி. அவளால் முடியவில்லை.

விசுவநாதனும் அவளுடைய மன நிலையில் தான் அப்போது இருந்தான். அவனை வரவேற்பதற்காகச் சக்கரவர்த்தியால் அனுப்பப் பட்ட சாளுவநரசிம்மர் அவனிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. ''லட்சுமி இங்கு வந்திருக்கிறாளா?'' என்று அவன் கேட்ட போது, ''அவளுக்கு இங்கு என்ன வேலை?'' என்று அவனையே திருப்பிக் கேட்டார் அவர்.

இவ்வளவு குதூகலம் நிறைந்த வரவேற்பும் அவனுக்கு வரவேற்பாகவே தோன்றவில்லை.

(தொடரும்)





# கவர்ச்சிகரமான பல வண்ண நைலான் ஸ்ட்ராப்புகளை பெண்டெக்ஸ் தற்பொழுது அறிமுகப்படுத்துகிறது





வண்ணங்களைப் புகுத்தி வாழ்க்கையை அழகுறச்செய்யுங்கள். பலப்பல விதங்களிலும், கண்ணைக் கவரும் வெவ்வேறு வண்ணங்களில், பெண்டெக்ஸ் கடியார ஸ்ட்ராப்புகள் இப்போது உங்களுக்காகவே வந்திருக்கின்றன. உயர்ரக கடியார ஸ்ட்ராப்புகளைத்தயாரிப்பதில் புகழ்பெற்ற அதே பெண்டெக்ஸ் கம்பெனியார் அளிப்பவைதான் இப் புது மோஸ்தர்கள் எல்லாம்.

**"Bentex"**

## குட்டிக் கதைகள்



# சுதந்திரம்

கட்டுண்டு கிடந்த நாய் ஒன்று, அந்தக் கட்டிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள ஒரு நாள் ரகளை செய்து கொண்டிருந்தது.

''அமைதி, அமைதி!'' என்றது அதற்கு எதிர்த்தாற்போல் கூண்டில் அடைக்கப்பட்டிருந்த ஒரு கிளி.

''அமைதியாவது அமைதி, இந்த அடிமை வாழ்விலிருந்து விடுதலை பெறும் வரையில் இனி எனக்கு அமைதி என்பதே கிடையாது!'' என்றது நாய்.

''அந்த நாளைத்தான் நானும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால்...''

''ஆனால் என்ன?''

''மூன்றாவது பேர்வழியின் துணையில்லாமல் அது இவ்வளவு எளிதில் முடியாது போலிருக்கிறதே?'' என்றது கிளி.

''அதற்கு யாரைத் தேடுவதாம்?'' என்றது நாய், அவநம்பிக்கையுடன்.

அப்போது அங்கே வந்த ஒரு குரங்கு ''நீங்கள் விரும்பினால் உங்களுக்கு நான் உதவத் தயார்!'' என்றது.

''நன்றி; உங்கள் உதவியை நாங்கள் அகமும் முகமும் மலர வரவேற்கிறோம்!'' என்றன கிளியும் நாயும் ஏககாலத்தில்.

அவ்வளவுதான்; அடுத்த நிமிஷமே நாயை அவிழ்த்து விட்ட குரங்கு கிளியின் கூண்டையும் திறந்தது.

''விடுதலை, விடுதலை!'' என்று கூவிக் கொண்டே வீதியில் சிறகடித்துப் பறந்தது கிளி; ''சுதந்திரம், சுதந்திரம்!'' என்று ஆனந்தக் கூத்து ஆடிக் கொண்டே ஊர் முழுவதும் சுற்றிச் சுற்றி வந்தது நாய்.

ஃ ஃ ஃ

சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் தன்னால் விடுதலை செய்யப்பட்ட கிளியைச் சந்தித்த குரங்கு, ''எப்படி இருக்கிறது, விடுதலை?'' என்று கேட்டது.

''ஆனந்தம், பரமானந்தம்!'' என்றது கிளி கன குஷியுடன்.

''மகிழ்ச்சி!'' என்ற குரங்கு அதனுடன் விடுதலை செய்யப்பட்ட நாயை நோக்கி, ''எப்படி இருக்கிறது, சுதந்திரம்?'' என்று கேட்டது.

''அதிக மோசம்! காலையில் பால், மத்தியானம் இறைச்சி, மாலையில் பிஸ்கெட், இரவு மறுபடியும் பால்-இதெல்லாம் இந்தச் சுதந்திர வாழ்வில் எங்கே கிடைக்கிறது? ஊர் முழுவதும் சுற்றிச் சுற்றி வந்தாலும் ஒரு கவளம் எச்சில் சோற்றுக்கு ஓராயிரம் நாய்களுடன் போட்டியல்லவா போட வேண்டியிருக்கிறது!'' என்றது நாய், வெறுப்புடன்.

குரங்கு சொல்லிற்று:

''சுதந்திரத்தில்கூட எல்லோருக்கும் சுகம் கிட்டிவிடாது போலிருக்கிறது!''

# கடமை

காட்டுக்கு வேட்டையாட வந்திருந்த தன் எஜமானனுக்காகப் புதரில் மறைந்திருந்த ஒரு முயலை 'விரட்டு, விரட்டு' என்று விரட்டிற்று ஒரு நாய்.

ஓடி ஓடிக் களைத்த முயல் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க நின்று, ''அட, இனத் துரோகி! என்னைப் போல் நீயும் ஒரு மிருகம்; உன்னைப் போல் நானும் ஒரு மிருகம். கேவலம் ஒரு சில எலும்புகளுக்காக என்னை நீ இப்படிக் காட்டிக் கொடுக்கலாமா?'' என்று கேட்டது.

''காட்டிக் கொடுத்தால் இனத் துரோகி; காட்டிக் கொடுக்கா விட்டால் எஜமானத் துரோகி. இதில் எது தருமம், எது அதருமம் என்று நீதான் சொல்லேன்?'' என்று அதைத் திருப்பிக் கேட்டது நாய்.

முயல் விழிக்க, ''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். நீங்கள் உங்களுடைய கடமையைச் செய்யுங்கள்; பலனை எதிர்பார்க்காதீர்கள்!'' என்றது ஒரு கழுகு, அங்கிருந்த ஒரு மரத்தின் மேல் அமர்ந்தபடியே.

''சரி, இப்போது ஓடுவதுதான் என் கடமை!'' என்று சொல்லிக் கொண்டே முயல் ஓடிற்று.

''என் கடமை உன்னைத் துரத்துவது தான்!'' என்று சொல்லிக் கொண்டே அதைத் துரத்திற்று நாய்.

'டுமீல்' என்று ஒரு சத்தம்; சுருண்டு விழுந்த முயலைப் பாய்ந்து வந்த கழுகு தன் கால்களால் இறுகப் பற்றிக் கொண்டு மேலே பறந்தது.

இதைக் கண்டதும் ஒரு கணம் திடுக்கிட்டு நின்ற நாய் மறு கணம் தன்னைத் தானே சமாளித்துக் கொண்டு சொல்லிற்று:

''இது பலனை எதிர்பாராமல் கழுகு செய்யும் கடமை போலும்!''

—விந்தன்

# 'சிரிப்புக் கொத்து'

சாமா



"அப்பா இல்லே, மாமா!"

"அப்ப, என் பேரை எழுதி வெச்சுக்கோ. சொல்றேன்!"

"சரி மாமா!"

"என் பேர் அரவிந்தன்."

"சரி, 'அ' எப்படிப் போடறது மாமா?"



"புது வருஷத்துக்கு எங்க வீட்டுக்கு வாங்கோ மாமா! வந்தால் வாசலில் 'காலிங் பெல்' இருக்கும். அதை எட்டிக் காலால் அழுத்துங்க!"

"காலாலா!"

"ஆமாம்; நீங்க வரும்போது வெறும் கையோடு வரமாட்டீங்களே, மாமா!"



மாமா: என்னிடம் இரண்டு மாம் பழங்கள் இருக்கு. அதை உனக்குக் கொடுத்தால் நீ என்ன செய்வாய்?

மணி: வேண்டாம், நீங்களே தின்னுங்கள் என்பேன்.

மாமா: சபாஷ்! எப்படிச் சொன்னே?

மணி: அவை நிச்சயம் அழுகலாகத் தான் இருக்கணும். நல்லதா இருந்தால் நீங்களே சாப்பிட்டிருப்பீங்களே!



"பாவம்! இந்தப் பின்னணிப் பாடகிக்குத் தன் சொந்தக் குழந்தையை பாட்டுப் பாடித் தூங்கப் பண்ண இரண்டாயிரம் ரூபாய் நஷ்டம்!"

"நஷ்டமா?"

"இதே பாட்டை சினிமாவில் பாடி ஒரு குழந்தையைத் தூங்கப் பண்ணினால் ரூபாய் இரண்டாயிரம் அவளுக்குக் கிடைத்திருக்குமே!"



"நான் பேசியதைப் பலர் பாராட்டுறதும், நீ ஓடி வந்து ரெண்டு சாக்லேட் கொடுத்தது தான் எனக்குச் சந்தோஷம்!"

"நான் லொட. லொடன்னு பேசினால் அதை நிறுத்த எங்க அம்மா எனக்கு இரண்டு சாக்லெட் கொடுப்பா. அதுமாதிரி..."

# நிகரற்ற பராமரிப்பு

அள்ளி அணைக்கும் இன்பமாம். உள்ளம் நிறைந்த பாசமாம். ஒப்புயர்வற்ற பராமரிப்பு...நீடித்து நிலைக்கும் சிந்தால் பராமரிப்பு. தன்னிகரற்ற ஜி-11* (ஹெக்ஸக்லோரோபீன்) அடங்கியுள்ள, மணம்கமழும் சிந்தால், சிறு குழந்தையின் சருமத்தின் மீதும் வாழும் கிருமிகளை அழித்துவிடும். பரிசுத்தம் செய்யும்போதே இதமளிக்கும் அற்புத மென்மை உள்ள சோப்.

சிந்தால் சோப்பினால் குளித்த பிறகு சிந்தால் டாய்லெட் பவுடரைத் தூவிக்கொண்டால் அதுவே முழுநிறைவான சிந்தால் பராமரிப்பு.

* எல். ஜிவாடன் எட். ஸீ, எஸ். ஏ. அவர்களின் டிரேட் மார்க்.

உங்கள் குழந்தைக்காக, சோப்பிலும், சில ஒப்பனைப் பொருள்களிலும் உபயோகிப்பதற்கான பரிபூர்ண நாற்றநீக்கியை உருவாக்க உழைத்த பல்லாண்டு கால ஆராய்ச்சியின் பயனை அடையுங்கள்: விஞ்ஞானபூர்வமான முழுத் தகவல்களைத் தரும் "ஜி-11 என்பது என்ன" என்ற, படம் கொண்ட இலவசப் புத்தகத்திற்கு, கோத்ரெஜ், பம்பாய் 12 என்ற முகவரிக்கு எழுதுங்கள்.




எதனிலும் மேலானது

**சிந்தால்!**

CT. 22A-TAM.




தி. நகர் பஸ் நிலையம் ஒரே பரபரப்பில் மூழ்கி யிருந்தது. அலுவலக நேரமில்லை என்றாலும்கூட இங்கு கூட்டத்துக்குக் குறைவில்லை. தூரப் பயணத்துக்கான பஸ் நிறுத்தத்தின் எதிரே இருந்த இடத்தில் நானும் மாலாவும் உட்கார்ந்து கொண்டோம். சாளரத்தின் வழியே வெளியே தெரிந்த பிரும்மாண்டமான சினிமா விளம்பரம், அதையடுத்துத் தெருவில் பிதுங்கி வழியும் கூட்டம்; கடைகளின் ஆரவாரம். கொளுத்தும் வெய்யிலில் உருகும் தாரின் பளபளப்பு, கானல் நீராக ஆடும் தரையைக் கிழித்துக் கொண்டு சற்றைக்கொரு தரம் வருவதும், புறப்படுவதுமாக இருந்த பஸ்கள்.

சரியாக மணி இரண்டு. நாகப்பட்டினம் பஸ் வரும் நேரத்தை அறிவிக்கும் பலகை மாட்டப்பட்டது.

''நம் பஸ் பாரிஸ் கார்னரை விட்டு இந்த நேரம் புறப்பட்டிருக்கும். இன்னும் இருபதே நிமிடங்களில் நாம் பஸ்ஸில் இருப்போம்'' என்றாள் மாலா.

''உம்! நிலையத்துக்கு வந்ததும் சொல்கிறேன் என்றாயே. யாராம் அந்தப் பையன்? என்ன படிப்பு? எங்கு வேலை? கடைசியில் வழிக்கு வந்து விட்டாயே? புகைப்படம் அனுப்பினார்களா? எனக்குக் காட்டவில்லையே நீ?'' என்று அடுக்கினேன் நான்.

சாவதானமாக ஒரு புன்னகை செய்தாள் மாலா. ''நாம்தான் மனம் விட்டுப் பேசி எத்தனை நாட்களாகிறது? சொல்கிறேன். எல்லாவற்றையும் சொல்கிறேன். பையன் பொறுவேட் என்றார்கள். கண்ணுக்கு லட்சணமானவன் என்று அப்பா எழுதுகிறார். வசதியும் உள்ள குடும்பம் என்பது அம்மாவின் எண்ணம். ஏதோ ஒரு கம்பெனியில் இருக்கிறாராம். எனக்கு இதைப் பற்றி யெல்லாம் கவலையில்லை, சாந்தி. என் லட்சியங்களுக்கு அவர் ஒத்தவரா என்பதுதான் நான் அறிய வேண்டியது. மற்றத் தகுதிகள் நடுத்தரமாக இருந்தாலும் போதும். உயர்ந்த குணமும் மென்மையான மனமும் இருந்தால் எனக்குப் பிடித்து விடும்.''

''ஓ! இப்போதும் நீ அரை மனத்தோடு தான் புறப்பட்டாயா? என்ன பெண்ணடி நீ? நம் பிரயாணம் வீணாகிவிடும் போலிருக்கே. என்னை வேறே மூன்று தினங்கள் அநாவசியமாக 'லீவ்' போட வச்சியேடீ...''

''நீதானே இப்போது ரொம்ப முக்கியம்! நீ அவரைச் சில கேள்விகள் கேட்டு அவரை எனக்கு உணர்த்தி, என்னை அவருக்கு உணர்த்தி ஒத்துப் போகுமா என்று பார்க்கப் போகிறாய்!''

''ஆனாலும் நீ பைத்தியக்காரிடி. யாரானும் கேட்ட பேர் சிரிக்கப் போகிறாங்க. பையனை மிரண்டு தோற்று ஓடி விடுவான்.''

''அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை.''

''உனக்கென்ன கவலை வந்தது? எல்லாவற்றையும் தூக்கி உங்கப்பா, அம்மா தலை மேலே வச்சிடப் போறே.''

''என்னை உனக்குப் புரியாது சாந்தி...''

''என்னடி இது புதுசாச் சொல்றே? உன்னையா எனக்குத் தெரியாதுங்கறே?''

''என்னைப் பத்தி என்ன புரிஞ்சுது? சொல்லேன்...'' என்று சீண்டினாள் மாலா.

''எதிலேயும் லட்சியம், கொள்கைன்னு ஒரு பிடிவாதம் உனக்கு. மணிமேகலைக் கொள்கையை ஆதரித்து வந்த நீ ஒரு படி கீழே இறங்கி வந்து, 'சரி! இப்படிப்பட்டவராக இருந்தால் கல்யாணம் பண்ணிப்பேன்'னு சொல்றே'' என்றாள்.

''ரைட்டோ! உனக்கு அப்படியெல்லாம் மனசுக்குள் கொள்கை இல்லே...?''

''நிச்சயமா இல்லே...''

''சரி. இப்படித்தான் வரப் போகிறவர் இருக்கணும்னு நினைக்கலேங்கிறே. இப்படிப் பட்டவரா இருக்கக் கூடாதுன்னு நினைக்கலியா?''

''நான் எதையும் நினைச்சதில்லையடி இவளே...''

''பொய்! பொய்! நீ நினைச்சதோடக் கூட மறுக்கவும் செய்திருக்கே...''

''என்னடி உளர்றே?''

''உளறல்லே சாந்தி. நீ இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்பட மறுத்து விட்டாய். உன் சகோதரியின் கணவராக இருந்தும் கூட. மண வாழ்வின் ஆரம்பத்திலேயே இரு குழந்தைகளையும் ஏற்று வளர்க்கப் பிரியப்படவில்லை. அவை உன் உடன் பிறந்த ரத்தத்தின் குழந்தைகளாக இருந்தும் கூட.''

''மாலா! நீ அளவு மீறி என்னைச் சீண்டுகிறாய்....''

''நான் சீண்டவில்லையே. நீ எதை இல்லை என்கிறாயோ அதை உண்டு என்று நிரூபிக்கிறேன். உலகில் எல்லோருமே தானறியாமல் ஒரு கொள்கையைக் கடைப்பிடிக்கவே செய்கிறார்கள். சிலர் என்னைப் போல் வெளியில் சொல்லி விடுவதால் தீவிரமாக இருப்பதாக நினைக்கிறோம். சிலர் உன்னைப் போல் மௌனமாகவே காரிய சாதனையில் ஈடுபடவோ, எதிர்க்கவோ செய்கின்றனர். இல்லையா, சாந்தி?''

நான் சிறிது நேரம் எதுவுமே பேசாமல் உட்கார்ந்திருந்தேன். எதிரே பஸ்களின் நெரிசலில் ஓர் உருவம் தெரிகிறது. ஆ! அது என் அக்காவின் கணவர் மாதவன். அக்கா இருந்தபோது எப்படி இருந்த அவர் எப்படி மாறி விட்டார்! சதா அவர் முகத்தில் குறுகுறுக்கும் புன்னகையும், பேச்சில் மிளிரும் குறும்பும் எங்கே போயின? உயிரான மனைவியை இழந்த துயர் இருக்காதா பின்னே? ஆனால் கூடவே கிள்ளைச் சிறு குழந்தைகளையும் வைத்துக் கொண்டு அவர் துன்பப் படுகிறார். அவர் மீது அன்பும், அநுதாபமும் எனக்கு உண்டுதான். இருந்தாலும் என் பெற்றோர் எனக்கு வரன் தேடுவதைச் சட்டென விட்டு விட்டு அவரைக் கைகாட்டிய போது நான் அயர்ந்து போய் நின்றேன். பிரமிப்பு நீங்கியதும் கோபம் குமுறியது. நான் எந்த விதமான லட்சியங்களையும் வளர்த்து வரவில்லை என்றாலும் அந்த முடிவை என்னால் ஏற்க முடியவில்லை. போயும் போயும் இரண்டாந்தாரமாக, ஆரம்பத்திலேயே இரு குழந்தைகளையும் வைத்துக் கொண்டு...—அக்கா கணவர்தானென்றாலும் அவரது புதுமை உணர்வுகள் மங்கிய மண வாழ்வில் எனக்கு என்ன சுகம் கிடைத்துவிட முடியும்?

அதோ அவருக்குரிய பஸ் வந்துவிட்டது. அதில் அவர் ஏறி மறையும்போதுதான் எனக்குக் கொஞ்சம் நிம்மதி ஏற்படுகிறது. அவர் பார்வையில் பட்டுப் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடுவதை நான் விரும்பவில்லை.

எக்ஸ்பிரஸ் பஸ் தி.நகர் பஸ் ஸ்டாண்டை விட்டுப் புறப்பட்டதுமே பஸ்ஸில் பொருத்த குரலில் பேச்சும் சிரிப்பும் அமர்க்களப்பட்டன. சட்டெனத் திரும்பிப் பக்கவாட்டில் நோட்டமிட்டேன். நாலைந்து 'சீட்'டில் சேர்ந்தாற் போல் அமர்ந்திருந்த அத்தனை பேரும் என் அலுவலகத்தில் வேலை செய்யும் ஆட்கள். வேறு பிரிவு என்றாலும் தினசரி காண நேரும் என்பதால் அவர்களை நன்றாக அடையாளம் புரிந்தது. இத்தனைபேரும் ஒன்றாக எங்கே கிளம்பினார்கள்? ஆபீஸுக்குக்கூட இவர்கள் சேர்ந்தாற்போல் வரமாட்டார்களே! என்ன பேச்சு, என்ன சிரிப்பு...

குனிந்த தலை நிமிராமல் போவார்களே இந்த ஜூனியர் இன்ஜினியர் குமாரும், டைப்பிஸ்ட் சங்கரனும். அவர்களும் கூடவல்லவா ஒரு மாதிரி பேசுவதும், சிரிப்பதுமாக உற்சாகம் பிடிபடாமல் துள்ளுகிறார்கள்!

''டேய்! இந்தப் பிரயாணம் நின்றிருக்க வேண்டியது. நம்ப சங்கரனுக்கு ஒரே பிடிவாதம்...'' என்றவாறே ரசனையோடு மூக்குப் பொடியை உள்ளுக்குள் இழுத்த ஆனந்த ரீங்காரத்துடன் பேசினார் அக்கவுண்டெண்ட் வரதராஜன்.

''உங்களுக்குத் தெரியாதா சார்! குளி கண்ட பூனை உறியைத் தாவிற்றாம்?''

'ஓ...ஓ...ஹோ' வென்ற இரைச்சலான சிரிப்பு. எனக்கு நேர் எதிர் சீட்டில் அமர்ந்திருந்தவர் எழுந்து தம் மனைவியை ஜன்னலோரம் அமரச் செய்து தாம் ஓரச் சீட்டில் அமர்ந்தார். முடிந்த அளவு பிறர் கண் பார்வைக்குத் தப்ப வைத்த காவல் அது!

எந்தத் திரைப்படத்திலும் எந்தக் கதாநாயகியின் கவர்ச்சி நடிப்பு இனிமையாக இருக்கிறது, எந்தக் கதாநாயகனும் கதாநாயகியும் நெருங்கி நடிப்பார்கள் என்ற சுவாரசியமான பேச்சில் ஆளுக்கு ஆள் மாறும் ரசனைகளைப் பரிமாறிக்கொண்டு பஸ்ஸிலிருந்த மற்றப் பெண்களை நோட்டமிட்டுவிட்டுப் பெருமிதத்தோடு பேச்சுக்குத் திரும்பிய வண்ணமிருந்தனர். என்னுள் எரிச்சல் மூண்டது. பஸ் பாலாற்றங்கரை ஹோட்டலின் எதிரில் நின்றபோது எல்லோரும் இறங்கிச் செல்ல ஆரம்பித்தனர். எங்கள் எதிர் சீட்டு மனிதர் மட்டும் மனைவியை ''இறங்க வேண்டாம். உனக்குக் காப்பி வாங்கி வந்து தருகிறேன். சுத்தப் பொறுக்கிகள். குடும்பப் பெண்கள் இருப்பதை நினைக்கிறார்களா?'' என்று முணுமுணுத்தவாறே எரிந்து விழுந்து விட்டுப் போனார்.

## சிறப்புச் சிறுகதை

ஒரு தீமையைக் கொல்ல ஒரு நன்மையைத் தியாகம் செய்கிறார். தீமை அழிந்த பின் எஞ்சிய எல்லாமே நன்மைதானே? கொட்டிலுக்கும், சாம்பிராணிப் புகைக்கும் உள்ள சம்பந்தம் போல்தான் இது. கொட்டிலுக்குச் சாம்பிராணியாகும் அவளும் கோவிலுக்குக் கூடமாகும் நானும் ஒன்றாக முடியுமா? இந்தப் புதிரை எத்தனை அழகாக விடுவிக்கிறது இந்தச் சிறப்புக் கதை!

நான் அப்போதுதான் மாலாவைப் பார்த்தேன். அவள் புத்தகத்தைப் புரட்டும் பாவனையில் அதைப் படிக்காமலேயே உட்கார்ந்திருந்தாள். "உனக்குக் காப்பி வேண்டுமாடி இவளே..." என்றேன் நான்.

"எனக்கு வேண்டாம். நீ வேண்டுமானால் போய்ச் சாப்பிட்டுவிட்டு வா..."

"எனக்குத் தேவையில்லை. இந்தப் பிஸ்கட் வேணு சாப்பிடலாம்" என்று பொட்டலத்தைப் பிரித்து அவளிடம் இரண்டைத் தந்துவிட்டு நானும் இரண்டு எடுத்துக் கொண்டேன். அதன் ஒரு மூலையைக் கடித்தவாறே "பார்த்தாயல்லவா இந்த 'கேங்'கை. எல்லாம் என் ஆபீசைச் சேர்ந்ததுகள்" என்றேன்.

"உன் ஆபீசைச் சேர்ந்தவர்களா? அப்படியானால் அவர்களுக்கும் உன்னைத் தெரியும் என்று சொல்..."

"தெரிவதால் என்ன வந்தது? ஒவ்வொருத்தரும் தன்னையே பெரிய ஹீரோவா நினைக்கிற காலமில்லையா? இந்த செட்டில் ஒரு சில நல்லவர்களும் எப்படிச் சேர்ந்தார்கள்னு தெரியலே. பூவோடு சேர்ந்தால் நாருக்கு மணம் வரும். இதுகளோ பன்றியோடு சேர்ந்த கன்றுகளாகின்றன..."

"என்ன மோசம் சாந்தி? நம் நாட்டிலே படிச்சவங்க கூட ஒரு சராசரி மதிப்பீட்டிலே உயர முடியாமல் இப்படிக் கேவலமாக ஆகிப் போறாங்க இல்லையா? ரொம்பப் பாவமாக இருக்கு இவர்களைப் பார்த்தால். சனி ஞாயிறு லீவுக்கு எக்ஸ்கர்ஷன் போறாங்க போலேயிருக்கு..."

"எக்ஸ்கர்ஷனா? இந்த 'செட்' அப்படியே பாண்டி போகிறது."

"நிஜம்மாவா சாந்தி?"

"ஏன் நீ பதற்றப்படறே? அவங்க பேசினதிலிருந்து ஊகிக்க முடியலியா?"

"நீ தப்பா சொல்றே, சாந்தி. அந்தச் செட்டிலே கொஞ்சம் வயசானவங்க இருக்காங்க; நடுத்தரம் இருக்கு. கல்யாணம் ஆகாதவங்களும் இருப்பாங்க போலிருக்கு..."

"நீ சொல்றது சரிதான் மாலா. ஒல்லியா உயரமா வழுக்கைத் தலையோட இருக்கிறாரே ஒருத்தர். அவர்தான் அக்கவுண்டெண்ட். நாற்பத்தைந்து வயசிருக்காதா அவருக்கு? அவரோட அஸிஸ்டெண்ட் பக்கத்திலே இருந்தவர். அந்த அடுத்த சீட்டில் கட்டை குட்டையாக உட்கார்ந்திருந்தாரே அவர் ஹெட் குமாஸ்தா ராமசாமி. அவர் அருகே இருந்தவர் ஸ்டோர் அஸிஸ்டெண்ட் ரங்கநாதன். இந்த நான்கு பேருக்குமே கிட்டத்தட்ட ஒரு வயசுதான். வீட்டிலே மனைவியோடும், நிறையக் குழந்தைகளோடும் வாழுகிறவங்கதான்..."

"எத்தனை பெரிய துரோகிகள்...!"

"சம்பாதிக்கிறதிலே ஒரு பகுதியை மனைவி குழந்தைகள் என்று நினைத்துத் தருகிறார்களே, அதுவே ஒரு பெரிய தியாகம் என்று வைத்துக் கொள் மாலா..."

"உம்! அந்த மற்றவர்கள் கூட உன் ஆபீஸ் தானா...?"

"ஆமாம், ஆமாம்! அவர்கள் பிரிவு வேறு. அவ்வளவுதான். இதோ இந்த சீட்டில் உட்கார்ந்திருந்தவர் உதவி குமாஸ்தா நீலகண்டம். அவர் பக்கத்தில் கறுப்பாக ஒல்லியாக ஒருத்தர் இருந்தாரே அவர்தான் டைப்பிஸ்ட் ரத்தினம். இந்த இரண்டு பேருக்கும் சின்ன வயசுதான். கலியாணமாகி விட்டது. மனைவிகளை பீச்சுக்கும், சினிமாவுக்கும் அழைச்சிண்டு போறதிலே குறைச்சல் இல்லே. அவர்கள் வீட்டில் என்ன காரணத்தைச் சொல்லிவிட்டு வந்தார்களோ..... அதோ அந்த முதல் சீட்டிலே ஜன்னல் ஓரம் உட்கார்ந்திருந்தவர்தான் ஜூனியர் இன்ஜினியர் குமார். அடுத்து உட்கார்ந்திருந்தது டைப்பிஸ்ட் சங்கரன். இரண்டு பேரும் 'பேச்சிலர்ஸ்'. ரொம்ப நல்லவங்களாக இருந்தவங்க..."

"இருந்தவங்க என்றால்...?"

"இப்போது இல்லேன்னு அர்த்தம்."

"அதெப்படி நீ சொல்றே?"

"பேச்சின்போது சங்கரனும்தான் இந்தப் பிரயாணம் ஸ்திரமாச்சுன்னு சொன்னார்களே... அப்புறம் குமார் ஒருத்தர் பாக்கி. இந்தக் குழுவோட புறப்பட்டபோதே தெரியலியா அவர் வண்ணமும்..."

இதற்குள் எதிர்த்தசீட்டுக்காரர் மனைவிக்குக் காப்பி வாங்கித் தந்துவிட்டு வந்து உட்கார்ந்தார். ஹோட்டலை விட்டு அந்தக் குழு வெளியேறிக் கொஞ்சமும் சிரிப்பின் அட்டகாசம் குறையாமல், தம்மைச் சுற்றிலும் உண்டாகும் புகை மண்டலத்தைக் கருத்தில் கொள்ளாமல் சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டிருந்தனர். சிறிது நேரத்திலேயே ஒவ்வொருத்தராகப் படியேறும் போதே உள்ளே இருந்த பெண்களை நோட்டமிட்டவாறே வந்து அமர்ந்தனர். இப்போது எங்கள் பக்கவாட்டு ஆசனத்தில் டைப்பிஸ்ட் சங்கரனும், ஜூனியர் இன்ஜினியர் குமாரும் உட்கார்ந்திருந்தனர். அந்தக் குழுவின் மற்றவர்கள் எங்களையும் அவர்கள் இருவரையும் பார்ப்பதையும், ஒருவருக்கொருவர் கண் சிமிட்டியவாறே கீழ்த்தரமான சமிக்ஞைகள் செய்வதுமாக இருந்தனர். மாலா முகத்தைச் சுளித்துக் கொண்டாள்.

"பாவம் குமார்! இன்னிக்கு அவனுக்குப் பாண்டிசேரியிலே ஜோலி யில்லே. நேரே கடலூர் போறார்...." என்று அநுதாபக் கணை விடுத்தார் உதவிக் குமாஸ்தா நீலகண்டம்.

''ஆனால் பாருங்க நீலகண்டம், இன்றைக்கே அவன் பெயருக்கு அறை எடுக்கச் சொல்றேன். நாளைக்குக் கிடைக்காதோ என்ற பயம்....''

''ஓ...கோ...கோ... அப்படியா? ராத்திரிக்கு உனக்குத் தூக்கம் வராதே குமார்... மை ஹார்ட்டி கங்கிராஜுலேஷன்ஸ் டு யூ...!''

''குமார், நானே ராத்திரி வந்துட முடியுமா?''

''நிச்சயம் வந்துடுவேன்.''

''நாளைக்கே முகூர்த்தத் தேதி வைச்சாக் கூடப் பயல் இந்த மூலை நோக்கித்தான் ஓடி வருவான்'' என்று முதுகைத் தட்டிக் கொடுத்தான் சங்கரன்.

''அந்தக் குறிப்பிட்ட கடையில் குறிப்பிட்ட விஷயத்தைக் கூட முன்னதாக வாங்கி வைக்கச் சொல்லியிருக்கானே குமார்....''

'சர்' என்ற ஒலியோடு நாங்கள் சென்று கொண்டிருந்த பஸ் நின்றுவிட்டது. டிரைவர் பரபரப்போடு இறங்கினார். கண்டக்டரும் ஓடினார்.

இரவு நேரத்தில் வீடு போய்ச் சேர வேண்டிய மற்றப் பிரயாணிகளெல்லாம் பொறுமையோடிருக்க, பாண்டிக் குழு பொறுமையின்றித் தவித்தது.

''என்னப்பா ரிப்பேர்? பஸ் புறப்படுமா? புறப்படாதா?'' என்று கேட்டவாறே தப தபவெனக் கீழே இறங்கினர்.

''பத்தே நிமிஷங்கள், ஸார்'' என்று விடை வந்தது.

''அடடா! நல்ல பஸ். சரியாக ஐந்துக் கெல்லாம் பாண்டி சேர்ந்துடலாமுன்னு நெனைச்சோமே... மணி நாலரை ஆகி விட்டதே. திண்டிவனம் தாண்டவில்லையே.. என்னப்பா டிரைவர்....''

''இதோ ஆச்சு ஸார்!''

கிட்டத்தட்ட அரை மணி நேரமாகிவிட்டது பஸ் கிளம்ப. சுற்றிலும் இருள் சூழ ஆரம்பித்து விட்டது. மாலா தலையைப் பற்றியவாறே சாய்ந்து விட்டாள்.

''தலையை வலிக்கிறதா மாலா?''

''இந்த நிஜ இளைஞர்களும், போலி இளைஞர்களும் போடும் கூச்சலில் தலை மட்டுமா வலிக்கும், மனம் கூட வலிக்கிறது, சாந்தி...''

''உனக்கேன் இந்தக் கவலை? உலகின் ஒரு பகுதியில் இப்படிப்பட்ட ஏடாகூடமான செயல்கள் மலிந்திருக்கவே செய்யும்.''

''பவித்திரமான அர்ப்பணத்துக்காக ஒரு பெண் தன்னைச் சமர்ப்பிக்க ஓர் ஆடவன் வாழ்வில் வருகிறாள். அவளோ தன்னைப் பாதுகாத்துக் கொண்டு அவனுக்காக எதிர்பார்த்துக் காத்திருப்பதில்லை. அவனுக்குரிய கட்டுப்பாடும், சட்டதிட்டங்களும் குறைவு என்பதால் தன் சூழ்நிலைக் கேற்ப மனத்தை அலைய விடுவதும், கூடிக்கெட்டுப் போவதும் சரிதானா?''

''ஏதேது? நீ இந்தக் குழுவை வைத்து எல்லா ஆடவரையும் ஒரு சமத்தில் போட கிறாயா...?''

''இளைஞர்களுக்கு வெற்றி சீக்கிரம் கிட்டுவது போல் இந்தக் குழு முழுவதும் சேர்ந்தால், இதைப் போல ஒரு பத்துக் குழுக்களை நாசமாக்கிவிடும் சாந்தி...''

''அதற்காக நாம் என்ன செய்ய முடியும்? இதற்கென்று ஒரு சீர்திருத்தத்தைத் தனியாக ஆரம்பித்து நடத்த நம்மாலாகுமா? பெண்களடி நாம்...!''

''இப்படி ஆண்கள் மாறிப்போக ஓரளவு பெண்கள்தான் காரணம் என்றும் சொல்லலாம். மணமாகிக் குழந்தை குட்டிகள் உள்ள ஆடவரும் இப்படிப் போலியான ஒரு களவைத் தேடி வருவதென்றால், அவன் உல்லாசத்துக்கு மனைவி ஒத்து வரவில்லை என்று தானே பொருள்? கணவனின் விவகாரங்களில் சம பங்கு எடுத்து உதவியோ, உல்லாசத்துக்கு ஒத்து வரவோ இல்லாமல் தனித்துக் குடும்பம், குழந்தைகள் என்று நின்று விடுவதால் குடும்பம் தனி, குடும்பத் தலைவனின் நடத்தை தனி என்று வேறாகி விடுகின்றன.''

''எந்தப் பிரச்னைக்குமே நீ ஒரு கோணலான வழி காண்பாய். எனக்குப் புரியாதம்மா...''

அதோ பாண்டியின் 'தோரணவாயில்' தெரிகிறது. பாதையில் நெரிசல் காண்பதால் எக்ஸ்பிரஸின் வேகம் கொஞ்சம் குறைகிறது. மறுபடியும் அந்தக் குழுவினர் முணுமுணுக்கின்றனர்.

இப்போது வண்டி கடைத் தெருவில் ஓடியது. மதுபான வகைகளின் பெயர்கள் பொறிக்கப்பட்ட கடைகளின் பெயர்கள் ஒளி மயத்தில் பிரகாசித்தன. சங்கரன் அப்படிப்பட்ட ஒரு கடையருகே பஸ் மெல்ல ஊர்ந்தபோது, ''நான் புட்டியோடு வருகிறேன். நீங்கள் முன்னே போறீங்களா?'' என்று மட்டமான மகிழ்வு தோன்ற விரைவாக எழுந்தான்.

''ஓ, எஸ்!'' குழு குரல் கொடுத்தது.

''கண்டக்டர்! கொஞ்சம் கதவைத் திறந்து விடேன். 'மூலை'க்கேயே இறங்கிக்கிறேன். பஸ்ஸைத்தான் லேட்டாகக்கொண்டு வந்தே. இந்த உதவியாவது பண்ணேன்...''

''அது மட்டும் வேண்டாம். சட்ட விரோதம். இதோ பஸ் ஸ்டாண்ட் வந்துவிடும்.''

சங்கரன் முணுமுணுப்புடன் உட்கார்ந்து கொண்டான். பஸ் ஸ்டாண்ட் வந்ததும் எல்லோரும் இறங்கிக் கொண்டனர். ஜூனியர் இன்ஜினியர் குமார் மட்டும் உட்கார்ந்திருந்தான்.

''நாளைக்கு நிச்சயம் வந்து விடுவேன். விஷ் யூ ஆல் குட்லக்!'' என்று குமார் மற்றவர்களுக்குக் கையசைத்தான்.

இதுவரை சந்தையைப் போலிருந்த பஸ் ஆரவாரம் அடங்கி அமைதி கண்டது. அடுத்து பஸ் கடலூரில் நின்றபோது குமார் இறங்கிக் கொண்டான். கோஷ்டியைப் பிரிந்ததிலிருந்தே சாதுப்பிள்ளையாக மாறிவிட்டிருந்தான் அவன். கொஞ்ச நேர நிறுத்தத்துக்குப் பின் நெடும்பரம் பாதையில் பஸ் ஓடிக் கொண்டிருந்தது.

''அடி இவளே! உனக்கு ஒரு திடுக்கிடும் விஷயம் சொல்லப் போகிறேன்'' என்று ஆரம்பித்தாள் மாலா.

# ஸ்ரீ சங்கர விஜயம்

ஆதிசங்கர பகவத் பாதாளின் அவதாரிகை, திக்விஜயம், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீட ஸ்தாபன வரலாறு முதலியவை அடங்கியது

விலை ரூ. 2.00

**கணேஷ் & கம்பெனி (மதராஸ்) பிரைவேட் லிமிடெட்**

71, பாண்டி பஜார் - மதராஸ்-17

# கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீம்



இதுவரை நீங்கள் அனுபவித்திராத அளவு குளுமையான க்ஷவரத்தை அளிக்கிறது!








# அறையோடு உள்ளிருக்கும் அனைவரையும் ராலிஃபேன் அதிகக் குளுமையோடு வைத்திருப்பதேன்?



## ஒரே வார்த்தையில் பதில்—நல்லுழைப்பு!

**எந்தக் கோணத்திலும் சுழலும்.**

ராலிஃபேனுக்கு உள்ள ஒப்பற்ற சுழற்சி முறையின் விசேஷம், நீங்கள் மின்விசிறியை எக் கோணத்திலும் திருப்பலாம். இஷ்டப்பட்ட இடத்திலே இளந் தென்றலை வீச வைக்கலாம்.

**அளவு மீறிய தென்றலை அள்ளி வீசும்.**

இயக்கப் பொருத்தத்திற்கு உரிய இறக்கைப் பொருத்தம் உள்ளது ராலிஃபேன். அதாவது, அதிகக் காற்றை அசைய வைக்கிறது— உங்கள் அறை முழுதும் குளுமை.

மேலான நல்லுழைப்பு, பாதுகாப்பான ஓட்டம், அமைதியான இயக்கம், அழகு நவீன பாணி. அனைத்தும் வாய்க்க, ராலிஃபேன் வாங்குவதற்கு ஈடில்லை.

மேலும் கிடைப்பவை: ஒயிலான மேஜை ராலிஃபேன், மற்றும் எக்ஸாஸ்ட் ஃபேன்.

ராலிஃபேன் பற்றிய முழு வர்ணப் பிரசுரத்தினை இலவசமாகப் பெற, இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பவும்: ராலீஸ் இந்தியா லிமிடெட், 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1.

பெயர்: ____________________

விலாசம்: ____________________

____________________

மறவாதீர்கள்: ஒவ்வொரு ராலிஃபேனும் உற்பத்திப் பழுதின்மைக்கு 2-ஆண்டு உத்தரவாதமுடன் வருகின்றது

குளுமை இன்பத்
தென்றல் தவழவே



**ராலிஃபேன்**

ராலி க்ரூப்பின் தயாரிப்பு.

''அது என்னடி அப்படிப்பட்ட விஷயம்?''

மாலா தன் கைப்பையைத் திறந்து உள்ளே யிருந்து ஒரு புகைப்படத்தை எடுத்துத் தந்தாள். சற்று முன் பஸ்ஸிலிருந்து இறங்கிப் போன குமாரின் படம் அது.

''இது ஏது உன்னிடம்?''

''எப்படி வந்திருக்கும். யோசித்துப் பாரேன்.''

''அப்படியானால்.... சற்று முன் அவர்கள் பேசியபோதுகூடத் தெரிந்ததே. அவன் பெண் பார்க்கப் போகிறான் என்று. ஓ! புரிந்து விட்டது. அவன் பார்க்கப் போகும் பெண்ணும் இதே பஸ்ஸில் பிரயாணம் செய்கிறாள் என்பது தெரியாது அவனுக்கு. அப்படித்தானே மாலா?''

''சந்தர்ப்பங்கள் என்னைச் சதிசெய்யவில்லை, சாந்தி. நான் தப்பித்துக்கொள்ள முடியும்.''

''ஏண்டி இதை முதலிலேயே என்னிடம் சொல்லவில்லை?''

''உன்னிடம் முதலில் காட்டியிருந்தால் நீ அவனிடமே ஏதாவது கேட்டு வைப்பாயே என்ற பயம்தான்.''

''உண்மைதான். அப்படியும் செய்வேன். அதுதான் முதலில் நீ இடுக்கிட்டவாறே கேட்டாயா? இப்போது என்ன செய்யப் போகிறாய்? போனதும் உன் அப்பா, அம்மாவிடம் கூறிவிட வேண்டியதுதானே?''

''வேண்டாம். நாளை வரட்டும். நேரிலேயே கேட்டுவிடலாம். நம்மைக் கண்டதுமே அடையாளம் புரியாமலா போகும்?''

''அதுவும் சரிதான். எல்லாவற்றையும் கேட்டுவிடலாம். கொஞ்சம் அவமான உணர்ச்சியைத்தான் தூண்டி விடட்டுமே...''

நாங்கள் நெடும்பாதையை அடைந்தபோது இருள் சூழ்ந்துக் கொண்டு விட்டது. மாலாவின் வீட்டுக்குப் போனதும் குளியல் சாப்பாடு எல்லாம் ஆனதும், படுத்தது தான் தெரியும். விடிந்த பொழுதின் மலர்ச்சியில்தான் கண் விழித்தேன். மாலா இரவில் சரியாகத் தூங்கவில்லை போலும். முகமெல்லாம் வாடி, கண்கள் சிவந்திருந்தன.

பூஜைக்குரிய மலர்களை நானும் மாலாவும் தொடுக்கவாரம்பித்தோம். உள்ளே மாலாவின் அம்மா ஏதேதோ பலகாரங்கள் செய்வதும், பரபரப்பாகக் காரியங்கள் செய்வதுமாக இருந்தாள். அவள் அப்பா அடுத்த வீட்டிலிருந்து இரவல் வாங்கிய நாற்காலிகளை ஓரிடத்தில் பாங்குற வைத்துக் கொண்டிருந்தார்.

''பாவம்! உன் பெற்றோர்கள்! அவன் வந்ததும் உன் பெற்றோர்கள் உபசரிப்பார்கள். நம்மைக் கண்டதும் மிரள்வான். நீ கேட்கும் கேள்வியில் அரண்டு விடுவான். உன் அப்பா அம்மாவுக்கு இந்த வரனும் இப்படிக் கை நழுவுகிறதே என்று இருக்கும்.''

''சாந்தி! இதைப் பற்றித்தான் நான் இரவு முழுதும் சிந்தித்துக் கொண்டிருந்தேன். நன்றாக யோசித்துப் பார்த்தால் இதில் மறுப்பதற்கே இடமில்லை போல் தோன்றுகிறது. நாம் நேற்று அந்த பஸ்ஸில் வராமலிருந்தால் குமாரைப் பற்றி எதுவுமே தெரி



## மறைந்த பணப்பை

### (சிங்காரத்தின் ஊகங்கள்)

1. பராங்குசத்தைத் தாக்கியவன் அந்த அறைக்குள் வாசல் வழியாக நுழைந்திருக்க முடியாது. ஏனென்றால் அந்த அறைக்குள் நுழையப் பராங்குசத்திடம் ஒரு சாவியும் தோட்டம் முதலாளியிடம் ஒரு சாவியும் இருந்தன. பராங்குசம் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்ததும் அவரது தலையின் பின் பக்கத்தில் தாக்கி யிருக்கிறான் திருடன். அப்போது அவர் கையிலிருந்த சாவி கீழே விழுந்திருக்கிறது. சிங்காரம் வந்தபோதும் அது அங்கேயே அப்படியே கிடப்பதைக் கண்டான். அப்படியானால் அவர் அடிபட்டு மயங்கி விழுந்ததும் உட்புறம் இருந்த திருடன் கதவைச் சாத்தி யிருக்க வேண்டும். அது முடியாததும் தானாகப் பூட்டிக்கொள்ளும் தன்மையுடைய கதவு. திருடன் சாவியை உபயோகித்து வெளியேற வில்லை என்பதை அங்கேயே கிடந்த அவரது சாவி கூறியது. ஆகவே திருடன் வேறு மார்க்கமாகவே உள்ளே வந்து வெளியேறி யிருக்கிறான்.
2. நுழைவாசல் வழியாக உள்ளே வராவிடில்? ஜன்னல் வழியாக உள்ளே புகுந்திருக்க வேண்டும். அது சாத்தியமா? நிர்மாணமாகிக் கொண்டிருக்கும் புதுக் கட்டிடத்தையும் தற்போதுள்ள கட்டிடத்தையும் இணைத்தது ஒரு குறுக்குக் கம்பி. அதில் தொங்கும் விளம்பரப் பலகை. அதன் வழியே வருவது ஒன்றுதான் சாத்தியம். இதைச் சாதாரண மனிதன் செய்திருக்க முடியாது. அப்படியானால்? கயிற்றில் நடக்கும் திறமை பெற்ற கலைஞனால்தான் முடியும் என்பது சிங்காரத்தின் ஊகமாகிறது.
3. கயிற்றில் நடப்பவர், தான் நிதானம் இழக்காதிருக்கக் கையில் ஒரு குச்சியை வைத்துக் கொண்டுதான் 'பாலன்ஸ்' பழகுவார்கள். பராங்குசத்தின் படுக்கை அறைக்கு நேர் எதிரேயுள்ள புதுக் கட்டிடத்தின் காலி அறையின் ஜன்னலருகே இந்தச் செயலுக்குப் பயன்படும் ஒரு கம்பு சுவரில் சாத்தி வைக்கப்பட்டிருந்தது. சிங்காரத்தின் ஊகத்தை உண்மையாக்கிவிட்டது. பராங்குசம் தன் நண்பர் வீட்டில் தாமதித்த நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு பகபதி அறைக்குள் புகுந்து அவர் வரவுக்காகக் காத்திருந்திருக்கிறான்.



யப் போவதில்லை. எனவே மணக்க ஒப்பியிருப்பேன்...''

''அதுதான் தெரிந்து விட்டதேடி. இல்லென்றாலும் என் ஆபீஸிலே இருக்கிறவரைப் பற்றி நான் சொல்ல மாட்டேனா?''

''உனக்கும் தெரியாதவராக இருந்தால்?''

''சந்தர்ப்பங்கள் சதி செய்யவில்லை என்றாலே. தப்பித்துக் கொள்ளும் வாய்ப்புத் தான் கிட்டி விட்டதே...''

''நான் தப்பியதால் எவளோ ஒருத்திக்கு அந்த ஸ்தானம் காத்திருக்கிறது என்றுதானே அர்த்தம்...?''

''அத்தனை தூரம் யோசிக்க என்ன வந்தது? பெண் குலத்துக்கே நீ பிரதிநிதியோ?''

''அப்படி அந்த இடத்துக்கு வரும் ஒருத்தி எப்படிப்பட்டவளோ? உன் ஆபீஸில் மற்றவர்களைப் போல் குமாரும் மனைவியை வீட்டில் வைத்து ஏமாற்றிவிட்டு வாழ்பவனாக மாறலாம். அவனைத் திருத்தும் நோக்கமே இல்லாதவளாக அல்லது அவனைப் பற்றிய உண்மையே அறியாதவளாக இருக்கலாம். எனவே இப்படிப்பட்ட மனநிலை உள்ள ஆடவனைத் திருத்தி வாழ்வில் ஈடுபட வைத்துச் சமூகத்தையே கெடுக்கும் மற்றவர்களுடன் சேராமல் வாழ வைக்க வேண்டும். இந்தத் திருத்தம் என்னால் இயலும் என்று நினைக்கிறேன். இதனால் குமாரின் நடத்தை இதே அழுகலில் பண்பட்டு, இன்னும் எத்தனையோ பேரைக் கெடுக்க முடியாதல்லவா?''

''மாலா! உளறாதே! உன் லட்சியம் அது இது என்பதற்கெல்லாம் நாசம் என்ற ஒரே பொருள்தான் உண்டு போலிருக்கிறது. எந்த மாதிரி பயங்கர வாழ்க்கையை நீ மாதிரிக்கு எடுத்துக் கொண்டிருக்கிறாய், தெரியுமா?''

''தெரியுமே. தெரிந்துதான் துணிந்தேன். என் லட்சியத்தில் என்றுமே எனக்கு நம்பிக்கை உண்டு. அவரை மணப்பேன், மாற்றுவேன், இது நிச்சயம், பாரேன். எனக்கு ஏற்பட்ட வாழ்வைச் செம்மையாக்கிக்கொள்ளும் தைரியம் இருக்கிறது சாந்தி.''

நான் வாயடைத்தேன். என்னால் எண்ணிக் கூடப் பார்க்க முடியாத தியாகம் அது.

''என்ன சாந்தி! வாயடைத்து விட்டாய். பெரிய அளவு பரவப் போகும் ஒரு தீமையை முளையிலேயே கிள்ளி எறிந்துவிடப் போகிறேன். ஒரு தீமையைக் கொல்ல ஒரு நன்மையைத் தியாகம் செய்யணும். தீமை அழிந்த பின் எஞ்சிய எல்லாமே நன்மை தானே? கொட்டிலுக்கும், சாம்பிராணிப் புகைக்கும் உள்ள சம்பந்தம் போல்தான் இது. கொட்டிலுக்குத்தான் சாம்பிராணிப் புகை வேண்டும் இல்லையா?''

''உன்னை ஆமோதிக்க என் மனத்திலும் அதிகமான லட்சியங்கள் அல்லவா குவிந்திருக்க வேண்டும்? நான் சாதாரணமான ஒருத்தி மாலா.''

அதன் பின் பெண் பார்க்க வந்த குமார் என்னையும், மாலாவையும் கண்டு திடுக்கிட்டதும், அவனைத் தனியில் சந்தித்துப் பேசிய மாலாவின் பேச்சில் அவன் கட்டுண்டு சம்மதம் அளித்ததும் 'சட்'டென்று நிகழ்ந்து போனவை. அவனிடம் வாக்குறுதிகள் பெற்றுக் கொஞ்சம் கூடச் சலனமில்லாமல் நம்பிவிட்டாள் மாலா.

ஒரு வாரத்துக்குப் பின் ஆபீஸில் குமாரைப் பார்த்தபோது அவனிடம் மாற்றம் ஏற்பட்டிருப்பது புலப்பட்டது. மாலா அவனைத் திருத்தும் முயற்சியில் வெற்றியடைந்து விடுவாள் என்று நம்பினேன்.

எனக்கு 'போன்' வந்திருப்பதாகச் சொன்னதும் வழக்கம் போல் மாலாதான் பேசுவாள் என்று எடுத்தேன்.

''நான் மாதவன் பேசறேன். குழந்தைகள் இரண்டு பேருக்குமே ஜுரம் வந்துவிட்டது. ஆபீஸில் முக்கியமான தணிக்கை ஒன்று இருக்கிறது. இன்று ஒரு நாள் லீவு எடுத்துக் கொண்டு வந்து குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளமுடியுமா?'' என்ற தணிவான குரல்.

''இப்போதே வருகிறேன், அத்தான்!'' என்று கூறிய கையோடு அவசரமாகப் புறப்பட்டேன்.

ஒரு மணி நேரத்தில் வீட்டை அடைந்து விட்டேன். ஆபீஸ் புறப்படத் தயாராக நின்றிருந்த அத்தான் குழந்தைகளுக்குரிய மருந்தைக் காட்டிவிட்டு அவசரமாக ஓடினார். என் சகோதரி இல்லாத வீட்டில் ஓர் அந்நியம் தெரியவே செய்தது. அதை உண்டாக்கியவள் நான்தான் என்று உள்ளம் இடித்துக் கூறியது. குழந்தைகள் இரண்டும் என்னைக் கண்டதும் சித்தி என்று கட்டிக் கொண்டன. அவர்களுக்குரிய மருந்தைத் தந்துவிட்டுக் குப்பையும் கூளமுமாகக் கிடந்த வீட்டைத் துப்புரவு செய்தேன். என் மனமும் துப்புரவாகி வந்தது.

''சித்தி இங்கேயே இரு'' என்று கெஞ்சின குழந்தைகள் பாலுவும் சுதாவும்.

மாலை அத்தான் திரும்பி வந்ததும் ''உனக்கு ரொம்ப சிரமம் சாந்தி. இனி நீ புறப்படலாம். நாளைக்கு 'லீவ்' போட்டு விட்டேன்'' என்றார்.

''இனிமேல் திரும்புவதாக உத்தேசம் இல்லை அத்தான். என் தேவை இங்கே ஏற்படுகிறது என்று தெரியும்போது இத்தனை நாட்களும் அர்த்தமற்ற நினைவுகளால் அதைப் புரிந்து கொள்ளவில்லை என்று உணர்கிறேன். அப்பாவுக்கு எழுதிவிடுங்கள், அத்தான்....''

''அப்பா! சித்தி இனிமே நம்ப கூடத்தான் இருப்பா இல்லே. சித்தி?'' என்று நான் எதைக் கூற முயன்றேனோ அதையே விளக்கமாகக் கூறினான் பாலு.

''உனக்கு இஷ்டமில்லாததை ஏற்கவேண்டாம் சாந்தி.'' அத்தானின் குரலில் என் பழைய மறுப்பு சுட்டிக் காட்டப்பட்டது.

''எதற்கும் ஒரு நேரம் வரவேண்டாமா? அது வந்துவிட்டது அத்தான். அதைத் தடுத்து நிறுத்த வேண்டாம்.''

லட்சியத் திருவாக வழிகாட்டிய மாலாவால் என் மனமாற்றம் செயல்படுகிறதா? ஆனாலும் அது எத்தனை பெரிய தியாகம்! கொட்டிலுக்குச் சாம்பிராணியாகும் அவளும் கோவிலுக்குச் சூடமாகும் நானும் ஒன்றாக முடியுமா?

'அசௌகரியமான' நாட்களில் அவதிக்கு மோஹினியின் யோசனை







கமலா ஸாரிடான் சாப்பிடுகிறாள்



பிறகு...




ஒரே ஒரு

# ஸாரிடான் 'ரோஷ்'

**வலியைப் போக்குகிறது.**
**ஆசுவாசப் படுத்துகிறது,**
**புத்துணர்ச்சி யூட்டுகிறது**

உலகப் புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான் அடிக்கடி ஏற்படும் வலிகளிலிருந்தும், நோவுகளிலிருந்தும் விரைவில், அபாயமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடல்வலி மற்றும் சாதாரண உடற் கோளாறுகளுக்கும் ஸாரிடான் சாப்பிடுங்கள். ஒரு வில்லை முழு டோஸ்; குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.





ஸாரிடான் ஒரே வில்லை போதும்

'ரோஷ்' தயாரிப்பு
ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ்: வால்டாஸ் லிமிடெட்

எம். எஸ்ஸி. பாஸ் செய்துவிட்டு வீட்டோடு உட்கார்ந்து கொண்டிருக்கிற சோமு என்கிற சோமசுந்தரத்துக்குப் புத்தி சுவாதீனமில்லாதும் போகவில்லை. பைத்தியமும் பிடிக்கவில்லை. ஆனால் அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று சிலர் சொல்லிக்கொண்டு நடப்பதை அவன் லட்சியம் செய்யவுமில்லை. அவனுடைய எந்த ஆராய்ச்சி மூளை எம். எஸ்ஸி. பரீட்சை பாஸ் செய்ய அவனுக்கு உதவியதோ, அதே ஆராய்ச்சி மூளைதான் புதிய புரட்சிகரமான இந்த 'ஐடியா'வையும் அவனுக்கு உருவாக்கித் தந்திருக்கிறது. ஐடியா: சொப்பனங்களுக்கு 'சயன்டிபிக்' ரீதியாகப் பலன் சொல்லுவது.




''உனக்கு ஏன்டா இப்படியெல்லாம் கோணல் மாணலாகத் தோன்றுகிறது?'' என்று அவன் தாயார் ஒரு முறை கேட்டாள், அலுத்துக் கொண்டு.

''வியாதியைக் கண்டுபிடிச்சு மருந்து கொடுத்தா மெடிக்கல் சயன்ஸ்! மாடியிலேயோ, மரத்தடியிலேயோ உட்கார்ந்து கொண்டு ஜோசியம் சொன்னால் அஸ்ட்ராலஜி என்கிறது. அத்தனையும் சயன்ஸ் என்கிறது. மாதமாடிக்ஸ் என்கிறது! சொப்பனங்களுக்குப் பலன் சொன்னால் மாத்திரம் கோணல் மாணல் என்கிறது. ஜெமி என்கிறது...!'' என்று ஒரு பிரசங்கம் செய்தான்.

''அவனைச் சொல்லிக் குற்றமில்லை. அவனுக்கு ஒரு கல்யாணத்தைக் காலாகாலத்தில் செய்து வைத்திருந்தால் இப்படியெல்லாம் அவன் மூளையைச் செலவழித்துக் கொண்டிருப்பானா? ராஜதானியிலேயே எம். எஸ்ஸி.யில் முதலாவதாகப் பாஸ் செய்த இந்தப் பிள்ளைக்கு ஏன் இப்படியெல்லாம் புத்தி போக வேண்டும்!'' என்று அம்மா அலுத்துக் கொள்ளுவாள்.

''ஒரு பெண்ணைப் பார்த்துச் சொல்லுடா, கட்டி வைக்கிறேன்!'' என்பாள்.

''பெண்ணையெல்லாம் பார்க்க முடியாது. சொப்பனம்தான் பார்க்க வேண்டும்! அதுதான் இப்போது முக்கியம். நான் நிறையப் பார்த்தால்தானே பிறருக்கும் பதில் சொல்லலாம்?'' என்று சோடா பாட்டில் மூக்குக் கண்ணாடியை எடுத்து மாட்டிக் கொண்டு (தலையை இன்னும் கலைத்து விட்டுக் கொண்டு) தாயாரைக் கோணலாக ஒரு பார்வை பார்ப்பான் சோமு.

''தலையெழுத்து... தலையெழுத்து!'' என்று அம்மாள் பெருமூச்சு விடுவாளே தவிர, அதெல்லாம் சோமுவின் செவியில் விழாது.

'கனவுகளுக்குப் பலன் சொல்லப்படும்' என்று நாலடிக்கு இரண்டடி போர்டு ஒன்று மாட்டி அவன் தன் தொழிலை ஆரம்பித்து வைத்தபோது பகிரங்கமாகச் சிரித்தவர்களும் இருந்தார்கள். துண்டால் வாயை, முகத்தை, தலையை மூடிக்கொண்டு கிக்கிக்கிக் கென்று சிரித்தவர்களும் இருந்தார்கள். சர்ம வைத்தியத்தில் நிபுணரான வைத்தியரை 'டெர்மடாலஜிஸ்ட்' என்பது போல், 'கனவு நிபுண'னான சோமசுந்தரத்தை 'ட்ரீமடாலஜிஸ்ட்' என்று சிலர் சொன்னார்கள். ஆனால் துணிந்து அவனிடம் வந்து, ''நான் நேற்றைக்கு எருமை மாட்டைச் சொப்பனத்தில் கண்டேன். என்ன பலன் அதற்கு?'' என்றோ, ''நான் நேற்றுக் கனவில் கழுதைச் சவாரி செய்கிற மாதிரி கண்டேன். பலன் நல்லதா,




கெட்டதா?'' என்றோ கேட்க யாரும் வரவில்லை. அதனாலெல்லாம் சோமு பயந்து கொண்டு போர்டையே கழற்றி விடவோ, தொழிலை நிறுத்திவிட்டு மேல் படிப்புக்கு முனையவோ இல்லை. தினமும் வெளியில் வந்து நின்று கொண்டு தன்னுடைய போர்டையே ஒரு முறை பார்த்து மயங்கி நின்று விடும் பழக்கம் சோமுவுக்கு வந்திருந்தது!

ஆங்கிலப் புத்தகம் ஒன்றில் மூழ்கியிருந்த சோமுவை ஒரு பெண் குரல் அழைத்து அழைத்து, அலுத்துப் போய்த் தேய்ந்து விட்டது. பிறகு மறுபடியும் அந்தக் குரல்

கடைசியாக "ஸார்!" என்று கூவியபோது தான், 'பரவாயில்லையே, குயில்கூடக் கனவு காண்கிறது. கண்டு பலனும் கேட்க வருகிறது நம்மிடம்!' என்று சொல்லிக்கொண்டே புத்தகத்தைப் பின்னாலிருந்த 'ஷெல்'பில் வைத்துவிட்டுத் திரும்பினான் சோமு.

"உட்காருங்கள்!" என்றான் அந்தப் பெண்ணிடம், தன்னுடைய சோடா பாட்டில் கண்ணாடியை ஒரு முறை சட்டை நுனியால் துடைத்துக் கொண்டே.

"என்ன பெயர்? வயது என்ன? விலாசம் என்ன?"

"பெயர் வித்யா. வயது இருபது. விலாசம் நாராயணசாமித் தெரு, மாம்பலம்."

சோமு தன்னுடைய தடித்த நோட்டுப் புத்தகத்தில் எல்லாவற்றையும் குறித்துக் கொண்டான். வித்யாவை நிமிர்ந்து பார்த்தான்: பார்த்துக் கொண்டே இருந்தான்.

"கனவைச் சொல்லட்டுமா?"

"சொல்லுங்கள். அதற்கு முன்னால் கனவில் என்ன வர்ணத்தைக் கண்டீர்கள் என்று சொல்லுங்கள் — நீலமா, பச்சையா, சிவப்பா, கறுப்பு வெளுப்பா...?"

மனிதர் கிண்டல் செய்கிறாரோ என்று குமாரி வித்யா யோசித்தாள் போலும். ஆனாலும் கேள்வி கேட்கிறாரே, பதில் சொல்ல வேண்டுமே என்று "கனவில் என்ன வர்ணம் என்று சரியாக நினைவில்லை. கறுப்பு—வெளுப்புக் கனவுதான் என்று தோன்றுகிறது... தயவுசெய்து அடுத்த கேள்வியைக் கேளுங்கள் ஸார்!" என்றாள்.

கண்ணாடியைக் கழற்றி அதை ஒரு கையால் சுழற்றிக் கொண்டே அடுத்த கேள்வியைக் கேட்டான் சோமு.

"கனவில் யார் யார் வந்தார்கள்?"

"என் தகப்பனார் — ஒரு லட்சாதிபதி அவர்!"

"அவர் எப்படி இருப்பார்?"

"குள்ளமாயிருப்பார்.' தடியா யிருப்பார்."

"தாடி வைத்திருப்பாரா? தலை வழுக்கையா?"

"தாடி கிடையாது. தலை வழுக்கைதான்."

"பலே! ஜிப்பா போட்டுக் கொண்டு வந்தாரா, ஷர்ட், ஸ்லாக் ஷர்ட் ஏதானும் போட்டுக் கொண்டு வந்தாரா?"

"எங்கே?"

"எங்கேயா? உங்கள் கனவில்?"

"ஜிப்பா போட்டுக் கொண்டு வந்தார்."

"நெற்றியில் விபூதி, குங்குமப் பொட்டு ஏதானும்?"

"ஆம்... சிவப்புக் குங்குமப் பொட்டு."

"கறுப்பு—வெளுப்புக் கனவு கண்ட நீங்கள் சிவப்புக் குங்குமப் பொட்டை எப்படிக் கண்டுகொண்டீர்கள்?"

"குங்குமப் பொட்டு சிவப்பாகத்தான் இருக்கும் என்பதற்குப் படுத்துத் தூங்கிக் கனவு கண்டுவிட்டுத்தான் சொல்ல வேண்டுமாக்கும்?"

"சபாஷ்! கோ அஹெட்..."

"கனவில் வந்து...வந்து...வந்து..."

"வந்து வந்து போயிருக்கும்? பலன் சொல்லுவது கஷ்டமாயிற்றே இப்படியென்றால்...?"

"நீங்கள் மிக அவசரப்படுகிறீர்கள்!"

"மேலே?"

"கனவில் வந்து... நான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்று அடிக்கடி சொல்லுகிறார்!"

"உபதேசம் மாதிரி சொல்லுகிறாரா, உரக்கக் கத்துகிறாரா?"

"இரண்டு மாதிரியும் இல்லை. 'கல்யாணம் செய்துகொள்' என்கிறார்."

"யாரை?"

மௌனம்.

"யாரை என்று கேட்கிறேன் — கனவு காண்கிறீர்களா, விழித்துக் கொண்டிருக்கிறீர்களா?"

"விழித்துக் கொண்டுதான் இருக்கிறேன்."

"பின்னே பதில் சொல்லுங்கள் என் கேள்விக்கு. யாரை?"

"பாண்டியன் என்பவரை."

"அவரைக் கல்யாணம் செய்துகொள்வதில் என்ன வருத்தம் உங்களுக்கு? அவர் கிழவரா? ஏழையா?"

"அவர் முரடர். அவரை எனக்குப் பிடிக்கவில்லை."

இதற்குள் சோமுவின் அறைக் கதவை யாரோ படபடவென்று தட்டினார்கள். "நீங்கள் இந்த அறையில் போய்ச் சோபாவில் உட்கார்ந்து கொள்ளுங்கள். அங்கே நிறையப் புத்தகங்கள் இருக்கின்றன. நான் இதோ வருபவரைச் சற்றுக் கவனிக்கிறேன்" என்று குமாரி வித்யாவிடம் கூறினான் சோமு. வித்யா அடுத்த அறைக்குள் சென்றதும், "கம் இன்" என்று கதவைத் தட்டியவருக்குக் குரல் கொடுத்தான்.

வந்தவர் குள்ளமா யிருந்தார். தடியா யிருந்தார். வழுக்கைத் தலையராய், ஜிப்பா தாரியாய் இருந்தார். அவரது நெற்றியில் குங்குமப் பொட்டு பிரகாசித்தது.

"உட்காருங்கள்!"

"உட்கார நேரமில்லை எனக்கு."

"நிற்க இருக்கும் நேரத்தில் உட்காரலாமே?"

அவர் உட்கார்ந்தார்.

"என் பெயர் மாணிக்கவாசகம். நான் ஒரு லட்சாதிபதி."

"பார்த்தால் தெரியவில்லை!"

"எனக்கு வரும் கனவுகள் யாவும் பயமுறுத்தல் கனவுகளாகவே வருகின்றன."

"பூதங்கள், பேய்கள், பிசாசுகள், மாமியார்கள் மாதிரி யாராகிலும் வருகிறார்களோ உங்கள் கனவுகளில்?"

"இல்லையில்லை... ஒரு வாலிபன் வருகிறான். என்னை மிரட்டுகிறான்..."

"கையில் துப்பாக்கி, வெட்டுக் கத்தி ஏதேனும்....?"

"பார்த்த நினைவில்லை. ஆனால் அவன் பேசுவதே பயங்கரமாக இருக்கிறது. கரகரவென்ற குரல். என் பெண்ணை அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமாம்!"

"ஓஹோ, உமக்கு ஒரு பெண் இருக்கிறாளா?"

"ஆம். பெயர் வித்யா. வயது இருபது."

"உடனே கல்யாணம் செய்து வைத்து விடுவதுதானே?"

பண்டிட்
டி.கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம் பிரைவேட் லிட். மதராஸ்-17

---

**ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு நிமிடமும், ஒவ்வொரு வினாடியும்,**

12,000 என்ஜின்கள், 32,000 பிரயாணிப் பெட்டிகள், 3,55,000க்கு அதிகமான சரக்குப் பெட்டிகள் ஆகிய வைகள் கொண்ட ரயில்வேக்கள் 10,000 ரயில்வண்டித் தொடர்களை, விரிவாக நாட்டின் குறுக்கிலும் நெடுக்கிலும் தினந்தோறும் இடைவிடாமல் 24 மணி நேரமும் இயக்கி வருகின்றன. இன்றுள்ள ரயில்வே ஸ்தாபனம் இந்தியாவின் மிகப் பெரிய தனிப்பட்ட தேசிய சொத்துக்களில் ஒன்றாகும். இதனுடைய விரிவான ரயில் பாதைகள், ரயில் நிலையங்கள், தொழிற்சாலைகள், மற்றும் என்ஜின்கள், கோச்சுகள், வாகன்கள் ஆகியவற்றின் முதலீடு மதிப்பு ரூ. 3,000 கோடிகளாகும். இந்த முதலீடு நாட்டு முன்னேற்றத்திற்காகவும், தேசப்பாதுகாப்பிற்காகவும் இணைக்கப்பட்ட சமுதாயத்தின் மிக நெருங்கிய தொடர்பிற்காகவும் செய்யப் பட்டுள்ளது.




**சரக்குகள் போக்குவரத்து**

**பிரயாணிகள் போக்குவரத்து**

**பாதுகாப்பு**

# இந்திய ரயில்வேக்கள்

113 ஆண்டுகள்  நாட்டுக்குச் சேவை

"என்னுடைய பெண்ணுக்கு அவனைப் பிடிக்கவில்லை."

"நீர் உமது பெண்ணின் விருப்பப்படி நடப்பவரா? அல்லது சர்வாதிகார எண்ண முடையவரா?"

"பெண்ணின் விருப்பம்தான் எனக்கும் பெரிது. ஆனால் அதற்காக அந்த முரடனைப் பகைத்துக் கொள்ள நான் விரும்பவில்லை."

"அந்த வாலிபன் உங்கள் உறவினனா?"

"ஆம். என் தங்கை மகன்!"

தடதடவென்று கதவு இடிபட்டது இப்போது. "நீங்கள் தயவுசெய்து இந்த அறையில் போயிருங்கள் சற்று நேரம்!" என்று மாணிக்கவாசகத்தைப் பார்த்துச் சொன்னான் சோமு. அதற்காகவே காத்திருந்தவர் போல, அவர் ஓர் அறைக்குள் சென்று கதவைத் தாழிட்டுக் கொண்டார்.

உள்ளே வந்த வாலிபனுக்கு வயது சுமார் இருபத்தாறு முதல் இருபத்தெட்டுக்குள் இருக்கலாம். கொடுவாள் மீசையும் கடைக் கிராப்புமாக, கண்கள் செங்கோளமாக மின்ன அவன் உள்ளே நுழைந்தான்.

"நீதான் கனவுக்குப் பதில் சொல்லு கிறவனா...?"

கண்ணாடியைக் கழற்றித் துடைத்துப் போட்டுக் கொண்டான் சோமு. வலக்கை விரல்களையும் இடக்கை விரல்களையும் வயிற்றுக்கு நேராகப் பிடித்து, கோர்ப்பதும், பிரிப்பதுமாக இருந்தவன் உதட்டை நாவால் துழாவி ஈரமாக்கிக் கொண்டே, "ஆமாம்!" என்றான். "உங்கள் பெயர்?"

"கனவைத்தான் சொல்ல வேண்டுமே தவிர பெயர், வயது, விலாசம், தொழில் எல்லாம் சொல்லி அழ வேண்டுமா உன்னிடம்?"

"நீங்கள் குறிப்பிட்ட நான்கு விவரங்களையும் என்னிடம் சொல்லுங்கள். பிறகு யாரிடமாவது போய், சாவகாசமாக அழுங்கள். உங்களுக்கு டயம் கிடைக்கும் போது...!"

வாலிபன் முறைத்தான். "பாண்டியனுடன் இதுவரையில் இப்படி யாரும் விளையாடியதில்லை!"

"ஓகோ, உங்கள் பெயர் பாண்டியனா? சின்ன வயதில் ரொம்ப நாட்கள் பாண்டி விளையாட்டு விளையாடியிருப்பீர்கள் போலிருக்கிறது. இப்பொழுது விளையாடப் பிடிக்கவில்லையாக்கும்?"

"ஏ, நொள்ளைக் கண்! அனாவசியப் பேச்சு வேண்டாம்! இங்கே கனவுகளுக்குப் பலன் சொல்லப்படும் என்று பித்தளை போர்டு போட்டிருக்கிறாயே, நான் கண்ட கனவுக்குப் பலன் சொல்ல முடியுமா உன்னால்?"

"எனக்குக் கொடுக்க 'பீஸ்' இருக்கிறதா, உம்மிடம்?"

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள், அமெச்சூர் நாடகங்களில் நடித்தால் எப்படிச் சிரிப்பாரோ அப்படிச் சிரித்தான் அந்த வாலிபன் 'ஹஹ் ஹஹ் ஹஹ் ஹெ'ன்று. தன் பாக்கெட்டுக்குள் தானே கையிட்டு, கத்தை ரூபாய் நோட்டுக்களை எடுத்துச் சோமுவின் முன் போட்டான். ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான். "போதுமா, இன்னும் வேண்டுமா?"

"உங்கள் விலாசத்தைத் தேடிக்கொண்டு என் 'பில்' வரும். அப்பொழுது உங்கள் ரூபாய் நோட்டுக்களில் சிலவற்றை என்னிடம் அனுப்பி வையுங்கள். இப்போது, கண்ட கனவைச் சொல்லுங்கள்!"

"கண்ட கனவுக்கும், காணாத கனவுக்கும் உன்னால் எப்படி வித்தியாசம் கண்டுபிடிக்க முடியும்?"

"கண்ட கனவு, சினிமாப் பார்த்துவிட்டுக் கதை சொல்லுவது போல் தடதடவென்று வரும். காணாதது கற்பனை. புத்தம் புது மேடைப் பேச்சாளனின் தடுமாற்றம் போல் வரும் இது. நீங்கள் சொல்லும்போதே நான் கண்டுகொள்வேன் கனவா கற்பனையா என்று. தயவு செய்து மேலே சொல்கிறீர்களா?"

"நான் ஒரு பெண்ணைக் காதலித்தேன்."

"அவள் உம்மைக் காதலிக்கவில்லை!"

"காதலிக்காவிட்டால் போகிறது. என் பணத்துக்கும் என் அழகுக்கும் என்னைக் காதலிக்க எத்தனையோ பேர்!"

குபுக் குபுக் குபுக்கென்று சோமு குலுங்கிச் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறாய்?"

"உன் அழகை நினைத்துப் பார்த்தேன்."

"ஏன், நான் அழகாயில்லை?"

"யார் இல்லையென்றது? நீங்கள் அழகாயில்லையென்று நான் அழவில்லையே, சிரிக்கத்தானே செய்தேன்!"

"நீ அப்பொழுதே பிடித்துக் குதர்க்கமாகப் பதில் சொல்லி வருகிறாய். எனக்குக் கெட்ட கோபம் வரும்!"

"வருமா, வந்துவிட்டதா?"

"இதோ வந்துவிட்டது!" என்று உறுமிக் கொண்டே அவன் ஒரு கைத்துப்பாக்கியை நீட்டினான் சோமுவை நோக்கி. "என்னுடைய கனவுக்குப் பதில் சொல்லவில்லை நீ இன்னும்!"

"நீங்கள் கனவே காணவில்லை இன்னும்! கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்கள்! போய்ப் படுத்துத் தூங்குங்கள். நன்றாகத் தூங்கினால் நல்ல கனவுகள் காண்பீர்கள். பிறகு என்னிடம் வாருங்கள். நான் பலன் சொல்லுகிறேன்!"

"அதுவரையில் நீ இருக்க மாட்டாய்!" என்று ஜன்னல் வழியே ஒரு மரத்தை நோக்கிச் சுட்டான் பாண்டியன். பிறகு சோமுவை நோக்கிக் குறி பார்த்தான். "ஒன்று.... இரண்டு...."

"அடப் பாவி, அவரைச் சுடாதே!" என்று அறையிலிருந்து பாய்ந்தோடி வந்த வித்யா, சோமுவைத் தன் இரு கரங்களாலும் காத்து மறைத்து நின்றாள்.

"நகர்ந்துகொள் நீ!" என்று பாண்டியன் சொல்வதற்குள் மாணிக்க வாசகம் பறந்து வந்து அவளை மறைத்துக் கொள்வதற்கும் பாண்டியனின் துப்பாக்கிக் குண்டு அவரைத் துளைத்துச் செல்வதற்கும் சரியாக இருந்தது.

"அப்பா!" என்று அலறிக் கொண்டே சோமுவின்மீது மயங்கி விழுந்தாள் வித்யா.

"சோமு! தூங்கினது போதும், காப்பியைக் குடி!" என்று அம்மா சோமுவின் தலையைத் தடவி எழுப்பினாள்.

புத்தகத்தை மார்போடு அணைத்துக் கொண்டே, "நான் ஒரு சொப்பனம் கண்டேன் அம்மா!" என்றான் சோமு ஒரு புன்னகையுடன்.

"என்னிடம் பலன் மட்டும் கேட்காதே!" என்ற அம்மாள், "அதோ பார், மூன்று பேர் உன்னிடம் கனவுக்குப் பலன் கேட்கக் காத்திருக்கிறார்கள்!" என்று வெளியில் நின்று கொண்டிருந்த மூவரைச் சுட்டிக் காட்டினாள்.

ஒரு வழுக்கைத் தலை ஜிப்பாதாரி குங்குமப் பொட்டுடன் நின்று கொண்டிருந்தார். வசீகரமான புன்னகையுடன் யுவதி ஒருத்தி அவரருகே நின்று கொண்டிருந்தாள். அவளை அடுத்து நின்று கொண்டிருந்த இளைஞனுடைய கொடுவாள் மீசையும் செவ்விதழ்களும் பயங்கரமாக இருந்தன.

"நான் கனவுகளுக்குப் பலன் சொல்லுவதை விட்டுவிட்டேனே! நீங்கள் வேறு யாரிடமாவது போய் உங்கள் கனவைச் சொல்லுங்கள்!" என்று கத்தியும் கையுமாக நாலுக்கு இரண்டடி போர்டைக் கழற்ற மதில் சுவர் மேல் ஏறினான் சோமு என்கிற சோமசுந்தரம்.

நண்பர் ஒருவரின் சிபாரிசின் பேரில் தம் பெண்ணுக்குச் சோமுவைப் பிள்ளை கேட்க வந்திருந்த அந்த வழுக்கைத் தலையரும், அவரது பெண்ணும், பெண்ணின் அண்ணன் கொடுவாள் மீசையும், அவன் பேச்சையும் அவன் நின்ற கோலத்தையும் கண்டு "நல்ல காலம், பைத்தியத்திடமிருந்து தப்பித்தோம்!" என்று அங்கிருந்து விரைந்தார்கள்.

'கனவில்தான் ஒரு கொலையைக் கண்டாயிற்று. நேரிலும் ஒன்றைக் காண வேண்டுமா!' என்று சோமு சொல்லிக் கொண்டது அவர்களுக்குக் கேட்டிருக்காது.

சோமுவுக்குக் கனவு காணத்தான் பிடிக்குமே தவிர, கொலைகளைக் காணத் துளியும் பிடிக்காது.

# ஒரு கல்லூரி நினைவு

கி. பி. 1880-ம் வருஷம். பி. ஏ. வகுப்பில் சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். எங்கள் ஸயன்ஸ் பிரிவில் மொத்தம் ஆறு மாணவர்கள். இந்த அறுவர் பேரிலும் எங்கள் கல்லூரி முதல்வர் டாக்டர் மில்லர் தம் உயிரையே வைத்திருந்தார். அவ்வமயம் கிறிஸ்துவக் கல்லூரி சைனாபஜாரில் தம்புச்செட்டித் தெரு முனையிலிருந்தது. பிரதி தினம் காலையில் எங்கள் முதல்வர் எங்களை எங்கள் வீடுகளிலே தம்முடைய போர்டு காரில் வந்து ஏற்றிக் கொண்டு கல்லூரிக்கு அழைத்துச் செல்வார். ஒரு நாள் என் நண்பன் ராஜுவேலு தனக்குத் தேக அசௌக்கியம் என்றும், அன்று தனக்கு லீவு வேண்டுமென்றும் கேட்டான். டாக்டர் மில்லர் எவ்விதத் தேக அசௌக்கியத்தையும் பரிசோதனை செய்து எளிதில் கண்டுபிடித்து விடுவார்.

"மகனே ராஜுவேல்! உனக்கு என்ன உடம்பு?" என்று தலைவர் அவனை வினவினார். எந்தப் பொய்ச் சாக்கைச் சொன்னாலும் டாக்டர் பரிசோதித்துக் கண்டு பிடித்து விடுவார் என அறிந்த அவன், "வயிற்றுப் போக்கு" என்றான். டாக்டர் அவனை விடவில்லை. காரில் ஏற்றிக்கொண்டு கிளம்பிவிட்டார். மௌண்ட் ரோட்டில் ஸ்பென்ஸர் அண்ட் கோ வந்ததும் "ஐயா, தாகம்!" என்று கூறி வண்டியை நிறுத்தச் சொன்ன ராஜுவேல் உள்ளே ஓடிப் போய், 'ஜாஸ்தி சோடா' என்றும் பேசி மருந்தை வாங்கி வாயில் போட்டுக்கொண்டு தண்ணீருடன் மருந்தை விழுங்கி விட்டுத் திரும்பி வந்தான். கால்மணி நேரத்தில் நாங்கள் கல்லூரி வந்து சேர்ந்தோம். அவ்வளவு தான்; ராஜுவேல் அருந்திய மருந்து தன் வேலையைச் செய்ய ஆரம்பித்து விட்டது. 'ஸார், ஸார்!' என்று கூக்குரலிட்டுக் கொண்டே, ராஜுவேல் வகுப்பு நடுவிலிருந்து வயிற்றைப் பிடித்துக் கொண்டே ஓடினான்.

டாக்டர் மில்லர் உடனே பறந்து விட்டார். கவலை மிகுந்த பரிவுடன் அவர், "மகனே! மகனே! ராஜுவேல்! நாம் வீட்டுக்குப் போவோம் வா. ஓய்வெடுத்துக் கொள், அப்பனே!" என்று அன்புடன் கூறிக் கொண்டே அவனைக் காரில் ஏற்றிக் கொண்டு சென்றார். அவன் வீட்டில் என்னையும் அவனுக்குத் துணையாய் விட்டு விட்டு அவன் பெற்றோர்களிடம் அவனை வெகு ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளும்படி சொல்லி, ஒரு மாற்று மருந்தையும் அவனுக்குக் கொடுத்துவிட்டுக் கவலை தோய்ந்த முகத்துடன் திரும்பினார். தலைவரின் எண்ணமெல்லாம் ராஜுவேலிடமே இருந்தது.



ராஜுவேல் உண்மையைத் தனிமையில் வீட்டில் துணைக்கு இருந்த என்னிடம் சொன்னான். நான் உடனே கல்லூரிக்குச் சென்று வகுப்பில் சேர்ந்து கொண்டேன். தலைவர் என்னை ஆச்சரியத்துடன் நோக்கி, "என்ன?" என்று வினவினார். நான் ராஜுவேல் செய்த மோசடியை விளக்கினேன். அவ்வளவுதான்; மறுபடியும் நாங்கள் இருவரும் ராஜுவேல் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தோம் அவருடைய காரில்.

டாக்டர் மில்லர் ராஜுவேலின் படுக்கை அருகில் வந்து முழந்தாளிட்டுக் கொண்டு ஒரு சிலுவை மாதிரி தம் மார்பில் சைகை செய்து, ராஜுவேலின் கைகளைப் பிடித்துத் தம் கண்களில் வைத்து, "குழந்தாய்! நீ என்னைப் புரிந்து கொள்ளவில்லையே?" என்று கண்ணீர் உகுத்தார். "ஆண்டவன் நீ செய்த பிழையைப் பொறுத்தருள்வார்" என்றார்.

அவ்வளவுதான்! ராஜுவேல் தேம்பித் தேம்பி அழுதான். நாங்களும் அழுதோம். - ஏனோ?

முதல்வர் ராஜுவேலுவைக் கட்டி அணைத்து ஆசீர்வதித்து விட்டு விடைபெற்றுச் சென்று விட்டார் — அன்று எங்களுக்கும் விடுமுறை.

— வி. என். ராகவன்




★ **ஜீவகீதம்**

★ **அரசினரின் தானிய வியாபாரம்**

★ **வீரசாவர்க்கர்**

**ஜெ**கசிற்பியனின் மிக அழகிய சித்திரம் "ஜீவகீதம்". நச்சியின் 'காரெக்டரை' அவர் சித்திரித்திருக்கும் முறை ஒன்றுக்கே அவருக்குப் பொன்னாடை போர்த்தலாம்.

சென்னை–2
7–4–66 எல். கிருஷ்ணசாமி

மதராஸ் பாஷை பேசி நம்மைக் கவர்ந்து விடும் நச்சி ஓர் அருமையான கதாபாத்திரம்.

சென்னை–33
8–4–66 பி. சங்கரன்

'சதிகாரர்கள் பிடிபட்டார்களா?' 'சந்திராவின் கதி என்ன?' 'சபேசனுடைய தந்தை பர்மாவிலிருந்து திரும்பி வந்தாரா?'

சென்னை–44
8–4–66 எஸ். கீதா

முடிவு பொருத்த ஏமாற்றம். இருப்பினும் நச்சியின் பாத்திரப் படைப்பு அற்புதமானது.

வாடிப்பட்டி
8–4–66 கே. அனந்தநாராயணன்

இறுதியில் மணக் கோலத்தில் யாரையுமே சந்திக்க முடியாததால் கொஞ்சம் ஜீவன் குறைந்து காணப்படுகிறது. கீதம் மாத்திரம் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது.

நெல்லிக்குப்பம்
7–4–66 பி. ரங்கராஜன்

ஒவ்வொரு பாத்திரத்தையும் உயிரோவியமாக்கி எங்கள் இதயத் திரையில் 65 வாரமாக வெற்றிநடை போடச் செய்த கதாசிரியர் எங்கள் உள்ளம் கவர்ந்த உயர்திரு ஜெகசிற்பியன் அவர்களைப் பாராட்டுவது எப்படி? அன்னாருக்கு எங்கள் ஆசிரியர்கள் மாணவர்கள் சார்பில் நன்றி, வணக்கம்.

பேரையூர் பி. ஏகதாஸ்
8–4–66 (தலைமை ஆசிரியர், மேட்டுப் பட்டி ஆரம்ப ஆதாரப் பள்ளி)

கதையை முடித்துவிட்டுத் துயரப் பொருமலுடன் 'கல்கி' இதழைக் கீழே வைக்கும் போது கண் இமைகளிலிருந்து சிதறுகின்றனவே கண்ணீர்த் துளிகள்; அவைதான் நாங்கள் ஆசிரியருக்கு மனமுவந்து அளிக்கும் அன்புக் காணிக்கை. ஒரு நல்ல நவீனத்தை எங்களுக்கு அளித்த 'கல்கி'க்கு எங்கள் நன்றி!

கரூர்
9–4–66 கட.சிங்காரம்

**நா**ட்டுக்குத் தேவையான பச்சைக்கடலை பஞ்சாப், உத்தர பிரதேசம், இராஜஸ்தான் மாநிலங்களில் மட்டும்தான் விளைகிறது. தமிழ் மாநில அரசாங்கம் அந்த மாநிலங்களில் கடலை குவிண்டல் ஒன்றுக்கு சுமார் ரூ. 56 விதமும், கடலை பருப்பு குவிண்டல் ஒன்றுக்கு சுமார் ரூ. 64 விதமும் செலுத்தி ஏகபோகக் கொள்முதல் செய்து, தமிழ் மாநிலத்துக்குள் ஏராளமான சரக்குகளைக் கொண்டு வந்திருக்கிறது. தனி வியாபாரிகளைப் பொறுத்தவரை உணவு தானியப் போக்குவரத்துக்கு அரசினரின் தடையிருந்து வருவதால், தனியார் வியாபாரம் இந்தச் சரக்குகளுக்கு அநேக மாதங்களாகவே கிடையாது.

மாநில அரசாங்கம் மலிவுதானியக் கடைகளுக்கும், வறுகடலைத் தயாரிப்பாளர்களுக்கும் கடலை குவிண்டல் ஒன்றுக்கு ரூ. 96.09 விலையிலும் கடலைப் பருப்பு மலிவுதானியக் கடைகளுக்குக் குவிண்டல் ஒன்றுக்கு ரூ. 105.88 விலைக்கும் ஹோட்டல்கள் போன்ற நேரடி உபயோகிக்கும் நிறுவனங்களுக்கு குவிண்டல் ஒன்றுக்கு ரூ. 135.88 விலைக்கும் அளித்து வருகின்றது. இந்த விற்பனை விலை மிக்க அதிகமானது என்பதுடன் மிக நியாயமற்றதாகும். 'மலிவு' தானியக் கடை மூலம் விநியோகித்தாலும் ஹோட்டல் போன்ற நிறுவனங்கள் விநியோகத்தாலும் அதிக விலையினால் கடைசியில் பாதிக்கப்படுபவர் பொதுமக்கள்தான் என்பதை அரசாங்கம் புரிந்து கொள்ளவில்லை.

வி. பி. ஆர். சுப்பையா
மதுரை கௌரவ காரியதரிசி, தமிழ்
12–3–66 நாடு உணவுப் பொருள் வியாபாரிகள் சங்கம்.

**எ**னக்கு வீரசாவர்க்கரைப் பற்றி எதுவும் தெரியாது! அவர் எவ்வாறு, எந்த வகையில் இந்த நாட்டுக்கு முக்கியமானவர் என்பதை அறிய ஆவல் ஏற்பட்டு எல்லாப் பத்திரிகைகளையும் பார்த்தேன்; ஆனால் அவற்றில் எல்லாமே அவருடைய மரணத்தைப் பற்றித் தான் குறிப்பிட்டுள்ளனவே தவிர அவருடைய வாழ்க்கை வரலாற்றை எந்தப் பத்திரிகையும் தெளிவுபடுத்தவில்லை. இச்சந்தர்ப்பத்தில் தான் எனது ஆவலைப் பூர்த்தி செய்யும் விதத்தில் 'கல்கி'யில் கட்டுரை ஒன்று வெளி வந்தது. வீரசாவர்க்கர் அவர்களைப் பற்றி விரிவாக அறிய வாய்ப்பேற்படுத்தித் தந்த ஒரே பத்திரிகை கல்கி.

திருத்துறைப்பூண்டி
2–4–66 எஸ். மார்கையன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

# கப்பலோட்டும் அழகே கண்கொள்ளாக் காட்சி

## அரவிந்த்

தரத்திலுயர்ந்த துணிகள்
நாகரீகச் சிறப்புக்கு நல்வனப்பைத் தருகின்றன.

வகைபறுக்களில் சில:

சான்பொரைஸ்டு பாப்லின்கள்.
ஷர்ட்டிங்குகள்: ஸ்ட்ரைப், டாபி,
செக், பைஜாமா.
வேட்டிகள்: மெர்ஸரைஸ்டு லான், 5531
சூட்டிங்குகள்: கேபர்டின்.
பிரின்டுகள்: பிரின்டெட் லான்கள்,
வாயில்கள், பாப்லின்கள்.
நெசவு செய்த கலர் புட்டாக்கள்.
விளேக்களிலும் புட்டாக்களிலும்
2x2 ஃபேன்ஸி ஃபுல் வாயில்கள்

SANFORIZED

டெபிலேஸ்டு* மற்றும் டெபிலேஸ்டு
இரட்டிப்புப் பரிசோதனை பெற்றது.

அரவிந்த் மில்ஸ் லிமிடெட்
அகமதாபாத்.




*Registered Users
-TM

No. M. 4392
as a Newspaper in Ceylon

■ தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் தண்மையான புகைநயம் தரும் பனாமா, பல லட்சம் பேர்களின் **முதல்** தேர்வாக விளங்குகிறது ■ அகில இந்திய ரகங்களுள், தன்னினத்திலேயே பெருவாரியான விற்பனையுடன் **முதன்மை** வகிக்கிறது பனாமா. ■ என்றும் புகழ் பரப்பிய வண்ணம் உள்ள பனாமா நாட்டின் பல பகுதிகளிலே **முதன் முதலில்** நிற்கிறது ■ இன்று மக்களைக் கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையில் இருபது ஆண்டுகளுக்கு முன் **முதலில்** வெளிப்பட்ட ரகமே பனாமாதான்.

